

மாமுதலடிபபோதொனறு கவிழ்த்தலர்த்தி மண் முழுதுமகப்படுத்து—ஒண் சுடரடிப்போ
தொன்று விண் செலீஇ நான்முகப்புத்தேள் நாடு வியந்துவப்ப—வானவர் முறை முறை
வழிபட நெறீஇ தாமரைக்காடு மலர்ககண்ணொடு கனிவாயுடையது
மாய் இருநாயிருயிரம மலர்ந்தன்ன கற்பகக் காவு பற்பளவன்ன
முடிதோளாயிரம் தழைத்த நெடி யோய்க்கலலது மடியதோவுலகே—திருவாசிரியம்–5.

உலகத்துக்கெல்லாம் மூலாதாரமாகிய திருவடிகளில் ஒன்றை நிலமட்டமாகப் பரப்பிப் பூமியை யெல்லாம் திருவடிக்குள்ளடக்கி ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு அழகிய ஒளியுடைய மற்றொரு திருவடித்தாமரையை பிரம தேவனுடைய உலகமானது ஆச்சரியமும் ஸந்தோஷமும் அடையும்படியாகவும் மற்றுமுள்ள தேவர்கள்சாஸ்திர விதிப்படி ஆராதிக்கும்படியாகவும், ஆகாசத்திலே செலுத்தி நிறுத்தி தாமரைககாடு மலர்ந்தாற்போலிருக்கிற திருக்கண்களையும் கொவ்வைக் கனி போன்ற திரு அதரத்தையும் உடையவனும் பெரிய ஆயிரம் சூர்யர்கள் சேர்ந்து உதித்தாற் போன்ற திருவாபிஷேகத்தை உடையவனும், பல வகைப்பட்ட கற்பகச் சோலைகள் போலே ஆயிரம் திருத்தோள்கள் பணைத்திருக்கப் பெற்றவனுமுள்ள பரம புருஷனை உனக்குத்தவிர வேறு யார்க்கேனும் இவ்வுலகம் அடிமைப்படக்கூடியதா ?

# ஸப்தகிரி

செப்டம்பர் - 1989

தனிப்பிரதி ரூ. 1 — மலா 20

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 4


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை — அரிய புவியியல் வளைவு-திருமலை.

முதல் உள்அட்டை

2-வது உள்அட்டை

பின்னட்டை — அந்தி வேளையில் திருமலை, புகைப்படம, டாக்டர். ஏ.வி. ராமமூர்த்தி ஹைதராபாத்


சிறபபாசிரியர் :
திரு. சிஎச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித தலைவர்,
தி.தி.தேவஸதானம, திருபபதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மனிதனுக்குப் பொருளும் பதவியும் இருந்திட்டால் நாளுக்கு மூன்று வேளை விருந்தும் மூன்றடுக்கு மாளிகை வாசமும் அவனுக்கு ஒரு கனவல்ல. ஆனால் அடுத்தவனது பொருளுக்கும், பதவிக்கும் அவன் மனம் சஞ்சலப்பட்டால், அவன் நிலை பரிதாபத்திற்குரியதாகிறது.

எதையும் முடிப்பேன், என்னால் முடியும் என்று கூறும்போது அது அவனது தன்னம்பிக்கையினைக் காட்டும். அது என்னால்தான் முடியும், நானேதான் முடிப்பேன் என்று எண்ணிடும்போது அது அவன் அகந்தையைக் கூறிடும். அதுவே அவன் திறமைக்கு எதிரி.

இறைவனால் படைக்கப்பட்ட எவ்வுயிரும் அற்பமானது அல்ல. ஓர் உயிரின் உயர்வை அதன் பிறப்பைக் கொண்டு, உருவத்தைக் கொண்டு, நிறத்தைக் கொண்டு மதிப்பிடுதல் விவேகமல்ல.

வாழ்க்கையில் ஒவ்வொருவருக்கும் எத்தொழிலாயினும், ‘குரு’வின் திருவருள் தேவை. அவரருளின்றி எவரும் எவ்வருளும் பெறார்.

மேற்கூறிய அறவுரைகள் யாவும் நாம் அறியப் பெறுவது பரம்பொருள் இம்மண்ணில் வாமனனாக திருவவதாரம் எடுத்தபோதுதான். வேய்ங்குழலான் கீதையில் தன் அவதார உண்மையினை நேரடியாகக் கூறியதை உறுதிப்படுத்தும் வகையில் “அறம் தலை நிறுத்தி வேதம் அருள் சுரந்து அறைந்த நீதி, திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தி தீயோர், இறுந்துக நூறி தக்கோர் இடர் துடைத்து ஏக ஈண்டுப்பிறந்தனன்......” எனும் கம்பன் வாக்கிற்கொப்ப, “அஜாய மானோ பஹுதா விஜாயதே” என்று கூறிட்ட வகையில், பிறப்பில்லாத அவன் மாந்தரினம் மாண்புறத் தன்னைத் தாழவிட்டுக் கொண்டு இம்மண்ணில் பிறக்கின்றான் அம்மாதவன். அப்பரமன் பல அவதாரங்கள் புரிந்திட்டாலும் அவனுடைய அம்சாவதாரங்களுள் மிகவும் வியக்கத்தக்கதும், சிந்தனைக்குரியதும், ஆழ்வார்களாலும், அடியார்களாலும் போற்றக்கதாகவும் விளங்கியது வாமனாவதாரமேயாகும். “ஆலமலர் வித்தின் அருங்குறளானான்” என்று கம்பர் கூறியது போல சிறிய ஆலமரத்தின் வித்தினுள்ளே ஒரு பெரிய மரமே அடங்கியிருப்பது போன்றே குறுகிய வாமனனே நெடிய திருமாலாக அவதரித்தது — அணுவின் அரிய சக்தியை இன்றைய அறிவியல் அறிவித்ததை அன்றே கூறிய அவ்வவதாரம் - சிந்தனைக்குரியது. மாதவன் எடுத்த அவதாரங்களின் போதெல்லாம் தீயோர்கள் அழிக்கப்பட்டனர். அதுவும் பாற்கடல் நாயகனை நேரிடையாக எதிர்த்தவர்கள் யாவரும் மிகக் கொடுமையாக அழிக்கப்படுவதே அவதாரத்தின் நோக்கமாக இருக்க, இவ்வவதாரத்தின்போது பலி எனும் அசுரன் அழிக்கப்படாது, அவனுடைய அகந்தை எனும் தீக்குணம் ஒன்றே அழிக்கப்பட்டது அவதாரத்தின் சிறப்பு பேசப் பெறுகின்றது; அசுரனின் பெருமை தெரிய வருகின்றது.

தன் பாட்டனாரைப் போன்றே தீவிர திருமால் பக்தன், சிறந்த வீரன், நல்ல ஆட்சியாளன், எல்லாவற்றிற்கும் மேலாக தேர்ந்த தர்ம நெறியாளன், சத்திய சீலன் பலி என்பான். இருந்தும், ‘குடம்பாலில் துளி விஷம், ‘போன்று அடுத்தவனது உடைமையினையும் தனதே என்று இந்திரனது பதவியைப் பறித்துக் கொண்ட அவனது ஆணவப் போக்கே அவனிடம் குடிகொண்ட ஒரே தீக்குணமாகும். அத்தகு ஒரு சிறிய குறைகூட - தீம்பண்புகூட தன் பக்தனிடம் இருத்தலை பரமன் சகிக்கவில்லை. அதனைக்களையவே நெடுமால் ‘கொடுங் குறளானன்’ அதுவரை பிராணிகளின் உருவத்தைக்கொண்டமைந்து அவதாரங்களை நிகழ்த்திய பரமன் உயிரின் பரிணாம வளர்ச்சியினை எடுத்துக் காட்டிடும் வகையில் முதன்முதலாக முழு மனித உருவில் வாமனனாக அவதாரம் மேற்கொண்டான். மற்றைய அவதாரங்களில் எதிரிகள் கதி கலங்க, இவவவதாரத்தின்போது எதிரி மதி மயங்க பரந்தாமன் திருவுருவம் கொண்டான்.

விளைவு தெரிந்திருந்தும், எப்பொழுதெல்லாம் சத்தியத்தை மீறலர்ம் என்று விதிவிலக்குகள் பலவற்றை மறை மொழிந்திட்டாலும் கொடுத்த வாககிற்காகத் தன்னையே தாழ்த்திக் கொண்ட பலியின் மாசற்ற உள்ளத்தையும. மனிதனுக்குப் புலனடக்கமும், போதும்எனும் மனப்பான்மையும் தேவை என்பதை விளக்கிடும் வகையில் மூன்றடி இடம் மட்டுமே போதும் என்று கேட்ட வாமனின் யாசகத் தன்மையினை எள்ளி நகையாடித் தன் ஈகைத்திறமையினைத் தானே புகழ்ந்து கொண்டு, பரம்பொருளுக்கே உரிமையான மூவலகங்களையும் தனதாக எண்ணிக் கொண்டு அகந்தையின் ஆழத்திற்கே சென்றுவிட்ட பலியினை, அவனுயிரைக் கொய்யாது, தன் மூன்றும் அடிக்காக பாதாளத்திற்கே அழுத்தி, கீழுலகில் சுதலம் எனும் அரசுக்கு உரிமையாக்கி, அவன்தம் மாளிகைக்குத் தன் உண்மைக் கோலத்தோடு வாயிற் காப்பாளனாகத் தன்னை நியமித்துக் கொண்ட செய்கை பரந்தாமனின் பரந்த உள்ளத்தையும், இவ்வவதாரம் பக்தி உலகிற்கு விளக்கி கூறும்.

அண்ட சராசரங்களின் ஆதிநாயகனான மாயோன் தன்னையே குறுக்கிக் கொண்டு, இரத்தலையே தொழிலாக ஏற்று, தன்னிலை தாழ்ந்து, பக்தன் ஒருவனின் குறை ஒன்று களையவே இம்மண்ணில் தோன்றிட்டான் என்று அறிந்திடும் போது, குறைகளையே நிறைவாகக் கொண்டு வாழும் நாம், ஒரு சில குறைகளாவது நம்மிடமிருந்து மறைந்திட, ‘ரக்ஷா வாமனா’ எனும் தேசிகன் சொல்லையே தாரக மந்திரமாகக் கொண்டு அவனடித் தொழுது நலம்பல பெறுவோமாக.

# செய்திச் சுருக்கம்

திருப்பதிக்கருகே நரசிங்காபுரத்தில் தி.தி.தேவஸ்தானத்தாரால் ரூ.5 இலட்சம் செலவில் டாக்டர். பால்ராஜ் மகரிஷி தலைமையில் செயல்படும் வகையில் ஆயுர்வேத மருந்தகம் ஒன்று விரைவில் அமைக்கப்பட உள்ளது. இம்மருந்தகத்திற்காக வருடத்திற்கு ரூ. 20,000 செலவழிக்கவும் மேலாண்மை முடிவு செய்துள்ளது.

பெங்களூர் மெக்டோவால்ஸ் மதுபான நிறுவனத்தின் தலைவரான திரு. விஜயமல்லய்யா அவர்கள் திருமலைக் கோயிலின் மூலவருக்கு அணிவிக்கும் வகையில் தங்க தசாவதார ஒட்டியாணம் மற்றும் இரண்டு நாகாபரணங்கள் வழங்கவும், தி. தி. தே. நித்ய அன்னதான திட்டத்திற்காக ரூ. 10 இலட்சம் வழங்கவும் முன் வந்துள்ளார். அவர்தம் முடிவிற்கு தி.தி.தே. மேலாண்மை ஒப்புதல் அளித்துள்ளது.

வேத விற்பன்னர்கள் கூடும்படியான 'வித்வத் சதஸ்' ஒன்று தி. தி. தேவஸ்தான ஆதரவில் திருப்பதியை அடுத்துள்ள ஸ்ரீநிவாசா மங்காபுரத்திலுள்ள ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் வளாகத்தில் இவ்வருடம் செப்டம்பர் மாதத்தில் நடைபெற உள்ளது. இதுபோது வேத விற்பன்னர்கள் பலரும் கௌரவிக்கப்படுவார்கள்.

29-7-89 முதல் 31-7-89 வரை மூன்று நாட்களுக்கு திருமலைக் கோயிலின் வருடாந்திர தெப்போற்சவத் திருவிழா மிக விமர்சையாக நடைபெற்றது. ஆந்திர மாநிலத்தின் விசாகப்பட்டினத்தில் ரூ.10 இலட்சம் செலவில் உருவாக்கப்பட்ட புதுத் 'தெப்பம்' இவ்வாண்டு தெப்போத்சவத்திற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தி. தி. தேவஸ்தான வனத்துறை திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கல்லூரி மற்றும் ஸ்ரீவேங்கடேஸ்வரா கலைக்கல்லூரிகளைச் சார்ந்த 'மாணவர்களின் உதவியுடன் 'மரஞ் செடி நடும் திட்டம்' வெற்றிகரமாக முடிக்கப்பட்டுள்ளது. இத்திட்டம் திருப்பதியிலிருந்து திருமலைக்குச் செல்லும் இரண்டாவது மலை வழிச்சாலையின ஓரங்களிலுள்ள குனறுப் பகுதிகளில் அதாவது 40 முதல் 50 ஏக்கர் நிலப் பரப்பில் வேம்பு,கொய்யா உள்ளிட்ட பல வகையான காட்டு மரங்கள், மற்றும் சில செடி வகைகள் நடப்பட்டும், அதற்கான விதைகள் தூவப்பட்டும் பணிகள் மேற்கொள்ளப்பட்டன.

பம்பாயைச் சார்ந்த திரு. சாப்ரியா அறக்கட்டளையினரால் அண்மையில் திருமலையில் ரூ. 55 இலட்சம் செலவில் கட்டப்பட்ட புதிய தங்கு வசதி மாளிகை 17-8-89 திறந்து வைக்கப்பட்டுப் பின்னர் தி.தி. தேவஸ்தானத்தார்க்கு ஒப்படைக்கப்பட்டது.

24-7-89 அன்று திருமலையில் 'தோட்டோத்சவம்' மிகச் சிறப்பாக நடைபெற்றது. மைசூர் மகாராஜாவின் பிறந்த நாளை ஒட்டி நடத்தப்படும் இவ்வுத்சவத்தன்று, திருமலைக் கோயிலிலிருந்து தன் துணைப் பெண் தெய்வங்களுடன் விலையுயர்ந்த ஆடை அணிகலன்களின் அலங்காரத்தோடு ஸ்ரீ மலையப்ப சுவாமிகள் கோயிலிலிருந்து திருமலை கர்னடக சத்திரத்திற்கு எழுந்தருளினர். அச்சத்திரத்தின சிறப்பு அலுவலர் திரு. எச். ராமய்யா, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. எஸ். இ. லக்ஷ்மிநாராயண மற்றும் தி. தி. தே. உயர் அலுவலர்களும் இவ்வுத்சவத்தின்போது பங்கேற்றனர்.

திரு. கொப்பல ஹரீஸ்வர ரெட்டி மற்றும் திரு. ராமசந்திரா ரெட்டி ஆகியோர் 22-7-89 அனறு தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு முன்னிலையில் பதவி பிரமாணம் செய்யப்பட்டு தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுவின் புதிய உறுப்பினர்களாக, நியமிக்கப்பட்டனர். இதுவரை உறுப்பினர்களாக இருந்து வந்த திருவாளர்கள் நாகி ரெட்டி, ஆனந்தராவ் ஆகியோர் இடங்களில் மேற்கூறிய நபர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இலங்கை கல்வி அமைச்சர் திரு. டபிள்யூ. ஜே லோக் பண்டாரி அவர்கள் தன் குடும்பத்தாருடன் 25-7-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார்.

திருப்பதி-புத்தூர் சாலை வழியில் திருப்பதியிலிருந்து சுமார் 45 கி.மீ. தொலைவிலுள்ள கார்வேட்டு நகர் எனும் கிராமத்திலுள்ள, அண்மையில் தி. தி. தேவஸ்தானம் தன் பொறுப்பில் மேற்கொண்டுள்ள ஸ்ரீ வேணுகோபால சுவாமி கோயிலின் வருடாந்திர தெப்போத்சவம் 15-8-89 முதல் மூன்று நாட்களுக்கு மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 15-8-89 அன்று கோயிலின் ஸ்கந்த புஷ்கரணியில் ஸ்ரீகோதண்டராமர் சுவாமியும், அடுத்த இரண்டு நாட்களின்போது ஸ்ரீவேணுகோபால சுவாமியும் தெப்பத்தில் வீற்றிருந்து அருள் புரிந்தனர்.

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்சவம் 1-10-89 அன்று நடைபெறும் அங்குரார்ப்பணம் உள்ளிட்டு 2-10-89 முதல் 10-10-89 வரை 9 நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்படும். 2-10-89 அன்று துவஜாரோஹணமும் 6-10-89 அன்று கருட சேவையும் 9-10-89 அன்று ரதோத்சவமும், 10-10-89 அன்று சக்ரஸ்நாநமும் நடைபெறும். இந்நாட்களின்போது கல்யாணோத்சவம், ஊஞ்சல் சேவை, திருப்பாவாடை, ஸகஸ்ர கலஸாபிஷேகம் போன்ற ஆர்ஜித சேவைகள் நடைபெற மாட்டா. ஆனால் ரூ. 1000/- செலுத்தி ஆர்ஜித பிரம்மோத்சவத்தில் பங்கு பெறலாம். ஒரு நாளைக்கு மட்டுமே கிருஹஸ்தர்கள் உத்சவத்திற்கு அனுமதிக்கப்படுவர். ★

தமிழ் மூன்று, இறைவர் செயல் மூன்று, வினை வடிவம் மூன்று, சக்திகள் மூன்று, கனிகள் மூனறு, மாநதர் சுகம்பறிக்கும் குணங்கள் மூனறு, நிலம் மூன்று, நித்தியப் பேரானந்தம் மூனறு, திறை மூன்று, தெரிந்தும் முயலாத அறம் மூனறு, வாழ்வின் கட்டங்கள் மூன்று, நீர் பொறுக்கும் பொருமை மூன்று, முன்றெழுத்துப் பெருமை கூறும். அன்பு, அறம், பாசம், பற்று, மனைவி, கல்வி என்று இப்படி மூன்றின் பெருமை சொல்லப்புகின் அதற்கு முடிவு இல்லை.

அதுபோல் இந்து மதம், இறைவன், இசை என்னும் இம்மூன்றும் நமது நல்வாழ்வுக்கு, நமக்கு வழிகாட்டுபவைகளாக அமைந்துள்ளன என்பதை இங்குக் காண்போம்.

"பாணிகள் கொட்டும் பேய்கள் பிதற்றும பாடலை மெச்சும் கதிர் வேலா" என்று ஸ்ரீ அருணகிரிநாதப் பெருமான திருப்புகழில் கூறுவதன் மூலம் இதனைஉறுதிசெய்யப்படுவதைக்காணலாம். பேய்கள் இடும் அ, உ, ஒ, என்று வரும் கூச்சல்களைக்கூட இறைவன் ஏற்றுக்கொள்பவராம்.

இ + சை = இ — இருந்து
சை — அசைவிப்பவர் அல்லது வசப்படுத்துபவர்.

இ + றை = இ — இருந்து
றை — ஆள்பவர் அல்லது நடத்துபவர்

என்பது நோக்கற்பாலது. மானிடரை அசைக்கும் தன்மையையும்

அடுத்து ஓங்காரத்துக்குள் அடங்கியது இசை. ஓம் என்னும் ஓங்காரமாவது, 1. நாதம் 2. ஒலி 3. ஓசை என்னும் இம்மூன்றும் இணைந்ததாகும். ஓ=என்ற பேரோசையோடு 'ம்' என்ற மகரம் சேர்ந்து ஓம் ஆயிற்று. இதுவே ஓங்காரம், இதுவேபிரணவம், இதுவே மந்திரம். "ஓங்காரத்துள்ளொளிக்குள் முருகன் உருவம்கண்டு தூங்கார் தொழும்புசெய்யாரென் செய்வாரெமனூதருக்கே" என்று அருணகிரிநாதப்பெருமான கேட்பதன் மூலம் அறிக. உயிர்கள் எமதூதர்கள் கையில் சிக்கக் கூடாது. அப்படிச் சிக்காதபடி நழுவிவிட வேண்டும். அதறகுத் தேவை பக்தி. பக்தியை வளர்க்கப் பயன்படுவது இசை என்று பலராலும் பேசப்படுவது கண்கூடு.

# இந்துமதம்-இறைவன்-இசை

"இந்து மதம் + இறைவன் + இசை= இன்பம்" என்னும் கணக்கு மிகப் பொருத்தம் ஆகும். உலகத்து உயிர்கள் எல்லாம இன்பத்தையே நாடுபவனவே தவிர துன்பத்தை வேண்டும் உயிர் இல்லை. கால வரம்பரையற்ற மிகவும் பழமையான தொன்மையான மதம் நமது இந்து மதம். இம் மதத்தினுடைய இறை வழிபாடும் அவ்விறைவனை இசையால் ஏத்துதலும் பழமையானதுதானே தவிர புதுமையானது அல்ல.

இறைவனால் உண்டாக்கப்பட்டதே இந்து மதமும், இசையும் ஆகும். இன்னும் ஒரு படி மேலாக இறைவன் இசை வடிவம் என்பதும பொருந்தும். இறைவனால் ஆளப்படாத உயிர்களும் இல்லை. அதுபோல் இசையினால் ஈர்க்கப்படாத உயிர்களும் இல்லை. இசையானது எந்த ரூபத்தில், எந்தத் தன்மையில், எந்த நிலையில் வந்தாலும் இறைவன் ஏற்றுக்கொள்கிறார் என்பது உண்மை.

ஆளும் தன்மையையும் கொண்டு வந்ததே இந்து மதம் ஆகும். இசை பாடி இறைவனை அடைந்த புண்ணியசீலர்கள் இம்மண்ணில் பலர் ஆகும். ஆழ்வார்கள், நாயன்மார்கள், தியாகப் பிரம்மம், பக்த இராமதாசர், மீராபாய், கனகதாசர், புரந்தரதாசர், அக்கமகாதேவி மற்றும் ஸ்ரீ அருணகிரிநாதர் என்னும் பலர் இதனுள் அடங்கும்.

இறையின் குணம் மூன்று. பதி பசு பாசம் என்று. இசையின் குணமும் மூன்று. சுருதி, லயம், தாளம் என்று. இசையானது மனதை ஈர்க்கின்றது இறை நம் உயிரை ஈர்க்கின்றது. எனவே இரணடும ஈர்ப்பு சக்திகள் கொண்டன. மேலும் இவ்விரண்டையும் நமக்கு அறிமுகப்படுத்தி ஆனந்தப் பெரு வாழ்வை அடையவைப்பதுவே இந்து மதம் ஆகும்.

கவிஞர். சோமசுந்தரப் பெருமாள்,
தங்கவயல்

இறைவனது அசைவே இசையெனவும் பல ஞானிகள் உணர்த்தியுள்ளனர். எவ்வாறு ஆயினும் இறைவனும் இசையும் ஒன்று

ஓம் — என்னும் ஓங்காரம்
ஒலி — வடிவம் 2 (சொல் வடிவம், வரி வடிவம்)
ஓசை—வடிவம் 2 (கூரோசை, நிரோசை)

ஒனறை ஒனறிலிருந்து பிரிக்கும் போது ஏற்படுவது கூரோசை. ஒரு குச்சியை இரண்டாக ஒடிக்கும்போது ஏற்படும் ஒலி. ஒன்றுடன் ஒன்றை இணைக்கும்போது ஏற்படுவது நிரோசை. ஒரு மணமகனும் ஒரு மணமகளும் சேரும்போது ஒலித்திடும் மங்கல ஒலி (கெட்டி மேளம்). இது தவிர பேரோசை என்று புகலப்படுவதுகடலோசை. அதுவேஓங்காரஓசை என்றும் கூறுவர். கடலலைகள் ஓசையினை கூர்ந்து கவனிக்கும்போது அவைகள் 'ஓம்' என்று இரைப்பது புலப்படும்.

ஓசை வடிவம் 2, மொத்தம் 5 ஆகும். சிவபெருமான் பஞ்சாட்சரமானவர். "நமசிவாய" என்னும் எழுத்து 5.

அடுத்து இசையில் மிளிரும் சுரங்களைப் பார்ப்போம். கர்நாடக சங்கீர்த்தத்தில் அமைந்த சுரங்கள் ஏழு. அவைகள் ச, ரி, க, ம, ப, த, நி என்பன.

இறைவன் படைப்பில் அர்த்தமற்றது எதுவுமல்ல. அத்தனையும் பொருளோடு, விளக்கத்தோடு, பிறவிகளாகிய நாம் உய்யவென்று ஏற்படுத்தப்பட்டதாகும். ஏன் ஏழு சுரங்கள். பத்தாகவோ அல்லது இருபதாகவோ நூறாகவோ இருக்கக் கூடாதா? என்பது மனிதர்கள் கேட்கும் கேள்வி. இதற்கு இறைவன் அளிக்கும் பதில் வருமாறு. கடல்கள் ஏழு, நிலங்கள் ஏழு, அரசர்கள் ஏழு, பிறவிகள் ஏழு, உயிரினங்கள் ஏழு, என்பதுபோல் இசையின சுரங்களும் ஏழு ஆக வகுக்கப்பட்டன என்று பேசப்படுகிறது. இறைவன் ஒன்று, வடிவம் இரண்டு, தமிழ் மூன்று, வேதம் நான்கு, மந்திரம் ஐந்து, சுவை ஆறு, சுரங்கள் ஏழு என்பது பழமையான இறைப் படைப்பின் பாங்கு என்பதை நாம் கண்டு தெளிதலே சாலச் சிறந்தது ஆகும்.

இனிச் சுரங்களைப்பற்றி பார்ப்போம்.

ச — சட்ஜமம்
ரி — ரிஷபம்
க — காந்தாரம்
ம — மத்திபம்
ப — பஞ்சமம்
த — தைவன்யம்
நி — நிசாரம்

என்று சங்கீத வல்லுநர்கள் புகல்வர். இந்தச் சுரங்கள் ஏழும் தெய்வத்தினுடைய அம்சம் என்பது பலருக்குத் தெரியாது. ச—சங்கரன், ரி—விநாயகர், க—சக்தி (காத்யாயணி) ம—முருகன், ப—பரந்தாமன் (நாரணன்) த—சூரியன், நி — நவக்கிரகங்கள் களாகவே திகழ்கின்றன.

சங்கரன் ஆபரணம்—சங்கராபரணம்
சண்முகனுக்குப் பிரியம்—சண்முகப்பிரியா
சாரங்கபாணிக்கு—சாமா
சக்திக்கு உகந்தது—கல்யாணி, பைரவி, ஆனந்தபைரவி
வீணாவாணிக்கு—ரஞ்சனி
கடவுளை ஈர்ப்பது—காம்போதி

காலையில் பாடுவது, மாலையில் பாடுவது என்று வரும் இராகங்களின் பெயர்கள் எல்லாம் இறைவனது திருநாமங்களாகவே மிளிர்கின்றன. இவைகளும் இந்த ஏழு சுரங்களுமே எத்திக்கு இசையானாலும் அதற்கு ஆதாரமாகவும் அடிப்படையாகவும் அமைந்து எங்கும் இசை வெள்ளம் பரவி ஓடும் கருணையைக் காட்டுவித்தவர் இறைவன். இதனை நமக்கு உணர்த்துவது இந்து மதம்.

கிருத்துவர் ஆனாலும் சரி, முகமதியர் ஆனாலும் சரி, அல்லது வேறெந்த மத இசை வல்லுநர் ஆனாலும் இந்த இசையின் பெயர்களை அவர்களால் மாற்றிச் சொல்ல முடியாமல் அமைத்துவிட்ட பாங்கை நாம் கண்டு வியக்க வேண்டும்.

சிவபெருமான் உடுக்கை மிருதங்கம் ஆனது. அவர் அழித்த அசுரனது நரம்புகளே தந்தி கருவியானது. கலைமகள் கையில் உள்ளது வீணை. சக்திக்கு தேவை உடுக்கை பம்பை முதலிய தோல் வாத்தியஙகள். நாரணன் கண்டது குழலோசை.

| | |
|---|---|
| சிவபெருமான் | —நாட்டியப் பேரொளி ஆகும். நடராசர். தவிர வீணை வாசித்தவர். |
| திருமால் | —குழல் இசைத்தவர். சிவபெருமான் நடனத்துக்கு மத்தளம் வாசித்தவர். இசைக்கு தாளம் போட்டவர். |
| நாரதர் | —தும்புரு மீட்டி இறைவனைப் பாடியவர். |
| நந்தி | —மத்தளம் வாசிப்பவர் சிவ தாண்டவத்திற்கு. |
| சரஸ்வதி | —வீணை மீட்டிடும் கலையரசி |
| பார்வதி | —நடன நாயகி |
| பூதகணகங்கள் | —தோள் கருவிகள் இசைத்தன. |

இப்படி இசையின் இராகங்களின் பெயர்களும், இசைக் கருவிகள் எல்லாம் இறையவர்களால் கையாளப் பட்டவை என்பதனால் இசையும் இறைவனும் ஒன்று. அந்த இறையுணர்வை ஊட்டுவித்தது நமதுஇந்து மதம் என்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்கும்.

இந்து என்பது இ+ந்+து=இந்து என்று பிரிக்கப்படுகிறது. இ=இகம், ந்=பரம், து=சுகம் அல்லது உணவு என்றும் பொருள்படுகிறது. இகத்துக்கும் பரத்துக்கும் சுகமானது அல்லது உணவானது என்று கொள்வதும் சிறப்பு. பக்தி இகத்தில் விளைவது. இசை பரத்தில் சேர்ப்பது. இரண்டும் மனிதனுக்கு பாக்கியத்தை வழங்குவதாகும். "இகபர சௌபாக்கியம் அருள்வாயே" என்னும் திருப்புகழ் அடிகளாலும் இதனை ஆழ்ந்துணர முடியும். எனவே இந்து மதமும், இறைவனும் இசையும் ஒன்றோடு ஒன்றாகப்பிணைக்கப்பட்டபிரிகக முடியாத பெருமை மிகு மரபு என்றால் அது பொருத்தமுடையது ஆகும்.

இன்னும் சொல்லப்போனால் இசையில் கர்வம் கொண்டவர்களை இறைவனே அடக்கி உணர்த்திய வரலாறுகளும் நம்மிடை உண்டு. இசை என்பதனை இ+சை எனவும் விரிவாக இ+ச்+ஐ எனவும் பகுக்கலாம்.

ஈர்ப்பு. இவை மூன்றும் இசை படப் பாடப்படும்போது காந்தம் இரும்பை இழுப்பது போல் இசை மனிதனை இழுக்கிறது.

அத்துடன் அல்லாது மனிதரிடம் உருவாகும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் நீக்கும் சக்தி இசைக்கு உண்டு. இம்மலங்களை முழுமையாக நீக்காவிட்டாலும், ஓரளவு நீக்கும எண்ணத்தையாவது மனிதரிடம் ஏற்படுத்துகின்றது.

இன்றைய தினம் ஆராய்ச்சியாளர்கள் இசையினால் எத்தனையோ நன்மைகள் உண்டு என்றும் கண்டுபிடித்துள்ளனர். இசை கேட்டு மாடு அதிகம் பால் கறப்பது, இசை கேட்டு பயிர் நன்கு வளருதல், இசை கேட்டு மலர் மலருதல், இசையினால் நோய் நீங்குதல் என்று பல செய்திகளை நாம் செய்தித்தாள்களில் காண முடிகிறது. இசையினால் மூளை விருத்தியடைதல், இசையினால் நினைவிழந்தவர்கள் தம் சுய நினைவை திரும்பப் பெறுதல் போன்ற பல நம்ப முடியாத செய்திகளும் வரத்தான் செய்கின்றன. எவ்வாறு ஆயினும் இசை இறைவனுள் ஒடுக்கம். இறைவன் இந்து மதம் கண்ட வழிபடு தெய்வம் என்பதால் மதத்துள் ஒடுக்கம் என்பது சரி. இம்மூன்றும் பண்டைய நாகரீகத்தின அடிப்படை என்பது மட்டுமல்ல தற்கால விஞ்ஞான வளர்ச்சிகளுக்கும் கூட துணை புரிகின்றன. மக்களது மேம்பட்ட வாழ்வுக்கு வழிகாட்டும் விளக்குகள் என்பதும் மிகப் பொருத்தம் ஆகும். அதனால்தானோ என்னவோ "இரவு பகல் பலகாலும் இயலிசை முத்தமிழ் கூறி திறமதனைத் தெளிவாக திருவருளைத் தருவாயே" என்கிறார் ஸ்ரீ அருணகிரிநாதப் பெருந்தகையார் அவர்கள் காரணம் நம்மை இறைவனிடமும், இந்து மதத்தின் வலிவான நியமங்களையும் இணைக்க வைக்கும் ஒருபாலமாக இசை இருப்பதனால்தான்.



திருமுழுக்காடி தெய்வ மூர்த்தங்கள் புறப்பாடு.
திரு. எஸ். ஜி. சேஷகிரி-கோவை.

இசையை இறைவனால் பெற்று, அவ்விசையால் இறைவனுடன் கலத்தல் என்னே பொருத்தம் பார்த்தீர்களா? இசை சப்த நாடிகளையும் இயக்கவல்லது. நிறுத்தவல்லது. உலக அசைவையும் நிறுத்தவல்லது. அசைக்கவல்லது ஆகும். "நான் அசைந்தால் அசையும் அகிலம் எல்லாமே" என்று இறைவனே சொல்வதைக் கவனிக்க வேண்டும். அது மட்டுமல்ல உயிர்கள் அசைய, ஆட இவ்வுலகில் தம் செயல்களைச் செவ்வனே நடத்திடத்தான் தில்லையிலே நடராஜப் பெருமான் ஆடும் கூத்து ஆகும். அவர் கூத்து நின்றுவிட்டால் நம் கூத்தும் நின்றுவிடும் எனபதை அறிதலே தெளிவு ஆகும்.

இறைவன் கம்பிக்குள் ஓடும் மின்சாரம் போன்றவர். அவர் சக்தி, செயல்களை, பலன்களைப் பார்க்கலாமே தவிர கண்ணால் காண முடியாது. மின்சாரத்தின் செயல்களைப் பார்க்கலாமே தவிர கண்ணால் நிறத்தையும் உருவத்தையும் அளவையும் பார்க்க இயலாது. மின்சாரத்தின் சக்தியைப்போல் இறைவனின் சக்தியைப் பார்க்கலாம். அந்த இறைச் சக்தியைப்போல் இசைச் சக்தியைக் கேட்கலாம். இறைச் சக்தி பார்ப்பது, இசைச் சக்தி கேட்பது, இந்து மதச் சக்தி உணர்வது.

இங்குக் கூர்ந்து கவனியுங்கள். ஒன்று பார்ப்பது, ஒன்று கேட்பது, ஒன்று உணர்வது. இந்து மதக் கோட்பாட்டை, நெறியை மனத்தால் அறிந்து உணர வேண்டும். அறிந்து உணாந்தவற்றை பிறர் கேட்க இசைக்க வேண்டும். கேட்கின்ற இசையினால் தலைவனைக் கூடவேண்டும். உணர்வாலும், ஒலியாலும், உலகத்து இறைவனை அடைய வேணடும். "நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே" (சிவ புராணம்). ஏனெனில் அரிய நோக்கமாயும், நுணுக்க உணர்வாயும் இருப்பவர் இறைவன். அங்கிங்கு எனாதபடி எங்கும் பரவியவர் இறைவன். எங்கும் பரவி மக்களுக்கு இன்பம் தர வல்லது இசை. எம்மதமும் உலகில்

இந்து மதம். இக்கூற்றுக் கேலிக்கூத்து அல்ல. உண்மை என்பதனைப் பல சான்றோர் விளக்கி உள்ளனர்.

"உலகெங்கும் மேவிய தேவாலயம் தோறும் பெருமாளே!" என்கிறார் அருணைமாமுனிவர். இது உலகெங்கும் இந்து மதம் பரவி இருந்ததற்கு ஆதாரம்தானே. இவைகளின் மூலம் நமது இந்து மதமும், இறையுணர்வும், இசையும் எப்படி ஒன்றைவிட்டு ஒன்று அகலாத வண்ணம் பின்னிப் பிணைந்தவை என்பதனைக் காண முடியும்.

இக்கலியுகத்தில் நாம் இறைவனைச் சேர வேண்டுவது பக்தியாகும். அப்பக்தி 1. வணங்குதல், 2. பூசைகள், 3. மானசீக பூசை, 4. தியானம், 5. யோகம், 6. இசை என்பனவற்றால் வெளிப்படுத்தப்படுகிறது.

இதுகாறும் கூறியவற்றால் இறைவன் இசை வடிவம், இசை இறைவன் ஆக்கம், இரண்டும் இந்து மதத்தின் இரு கரங்கள் ஆகும். அந்த வலுவான கரங்களே நம் புனித மதத்தை தாங்கி நிற்கின்றன என்று கூறினால் அது மிகையாகாது. மூன்று கால்களை கொண்டது முக்காலி என்கிறோம். அதன் மேற்பரப்பில் நாம் சமமாக சிரமமின்றி அமர முடிகிறது. அது போல் எடுத்துவிட்ட இப்பிறப்பில் நம்மை சமமாக, சிரமமின்றி அமர்ந்து பெரும்பயன் அடைய உதவிடும் முக்காலியாக விளங்குவது இந்து மதமும், இறைவனும், இசையும் ஆகும். அதில் சந்தேகமே இல்லை என்று உறுதி கொள்வோம், உயர்வு பெறுவோம் என்று சொல்லத்தான் வேண்டியுள்ளது. நமது நாட்டில் ஓடும் மூன்று புண்ணிய நதிகள்போல், நமது மதமும், இறைவனும், இசையும் என்று கொள்ளுதல் இன்னும் பெருஞ் சிறப்பு ஆகும்.

ஏனெனில் இம்மூன்றும் எந்த பிற மதங்களில் இருந்தோ அல்லது வேற்று நாட்டில் இருந்தோ தோன்றவில்லை. இவைகள் தானே இறையருளில் தோன்றியவை. "தானே நடந்து, தானே இருந்து, தானே எங்கும் சிவமாகி" இப்படி அமுத வாக்கால் அருணகிரிநாதர் கூறுவதைப் பாருங்கள்.

இசைக்காக இறைவன தெருவிலே
நடந்தார்,
இசைக்காக இறைவன ஆலயத்தை
விட்டு வந்தார்,
இசைக்காக இறைவன் எளியவராய
ஆனார்,
இசைக்காக இறைவன சேவகமும்
செய்தார்

இப்படிப்பட்ட கதைகள் பலவுண்டு என்பதை நீங்களும் அறிந்து இருப்பீர்கள்.

இராவணன் இசை பாடி கைலாய மலையையே அசைத்த வரலாறு உண்டு. அப்பர் அடிகள் இசை பாடி பூட்டி இருந்த கதவைத் திறந்தார். ஞானசம்பந்தர் இசை பாடி எலும்புகளை உயிர்ப்பித்து பெண்ணாக வரச் செய்தார். இராமதாசருக்கு சேவகனாய் வந்து இராமபிரான் துயர் துடைத்தார். மாடு மேய்க்கும் சிறுவர்கள் மாளவும் பின் உயிர்பித்து எழவும் செய்தது, அருணகிரிநாதர் பாடல். இப்படி விரிவான பட்டியலை வெளியிட முடியாது உதாரணத்துக்கு ஒன்றிரண்டுடன் விடுகிறோம்.

எனவே மனிதர்கள் பிறப்பின் பெரும்பயன் அடைந்து உய்த்திட உதந்தது இந்து மதம். இந்து மதம கண்டதே இறை வழிபாடு. அந்த இறைவனை இசையின் மூலம் எளிதாய் அடையலாம் என்பது ஒரு வழி. இவ்வுண்மையினை அறிந்தார்க்கு மகான்கள் செப்பி இருப்பதுபோல "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்ற நிலை தானே வந்து சேரும் எனபதிலும் ஐயமில்லை என்று நம்புவோம். ஏனெனில் இவ்வுலகில் எதுவும நம்மால் ஆவது இல்லை. ஆண்டவன ஆட்டுவிக்க நாம் ஆடுகிறோம இங்கு எனது என்பதற்கும் என்னாலதான் என்பதற்கும் நமக்கு எந்த அதிகாரமும் இல்லை. "என்னால் பிறக்கவும் என்னால் இறக்கவும், என்னால் எரிக்கவும், என்னால் அழைக்கவும் என்னால் தரிக்கவும் இங்கு நான யார்?" என்று நம் உள்ளத்தை தொட்டு உணர்த்துகிறார் ஸ்ரீ அருணகிரிநாதர்.

அதனால் இவ்வரிய பிறப்பில் நாம் பெரும் பயன இறைவனால் அடைவோம். இறைவன் ஊட்டிய இசையை வளர்ப்போம். இரணடும் கொண்டிலங்கும் நமது இந்து மதத்தை பேணிக் காப்பது இந்துக்களாய் பிறந்த நம் ஒவ்வொருவரது பெருங்கடமை என்று உணர்வோம். வளர்க இந்து மதம்! வாழ்க இறை வழிபாடு!! பரவுக இசை வெள்ளம்.

(குறிப்பு : இது ஓர் ஆய்வுக் கட்டுரை)



# கண்ணன் காட்டிய தத்துவம்

பகவான பரநதாமன இளம் வயதில தீராத விளையாட்டுப் பிள்ளை யாக இருநதார். அப்போது குளக கரையில நீராடிககொணடிருநத கோபிகா ஸதிரீகளின ஆடைகளை எடுத்துககொணடுமரத்தின மீதேறிச சென்று உடகாாநது கொணடு, அவாகள் நீராடி முடிதது விட்டுக் கரையின மேல் தங்கள ஆடைகளைக் காணுமல் வருந்தியதைக கணடு மகிழ்நதாராம கருநீல வண்ணனை கணணபிரான். இதுபோன்று அவரது குறும்பு விளையாட்டுகள் மிகப பல வாகும்.

'விளையாட்டே வினையாகும' என பது ஒரு பழமொழி. கணணபிரான் சிறு வயதில் விளையாட்டாகச் செய்த குறும்புகள் பிற்காலத்தில் ஒருமுறை அவருக்கே வினையாக முடிந்தது என் பது ஒரு கற்பனை நிகழ்ச்சியாகவே நாம் நினைத்துக்கொண்டாலும் அது ஒரு சுவையான கட்டமாகும்.

பாணடவர்கள வாழ்நது வநத இந்திரப் பிரஸதத்துககு கணண பிரான் ஒரு முறை சென்ருா. அங் கிருநத எல்லாரும கணணனைக்கணடு மகிழ்ச்சிப் பரவசம் அடைநதனர். அஙகு சிலநாள தஙகியிருந்தபோது ஒருநாள் அனைவரும சோநது நீராடு வதறகாக அரணமனையிலிருந்த தாம ரைத தடாகத்தை அடைநதனா.

அழகிய தாமரைத தடாகததில பாணடவாகளுடன பகவான கிருஷ் ணனும் இறங்கி நீராடத தொடங்கி னர். நீணட நேரம பல்வேறு செய்தி களைப் பரிமாறிக கொண்டும, நீநதி விளையாடிக் கொண்டும இருந்தனா. திரெளபதி, ருக்மணி, சத்யபாமா, சுபத்திரை ஆகிய பெணகள் மட்டும் தடாகத்தின் கரையில் அமைநதிருநத பூஙகாவில் அமர்ந்து இனிமையாகப் பேசிப் பொழுதைபபோக்கிக கொண் டிருநதனர்.

கதிரவன் நடுவானத்தில் உலா வரத் தொடங்கினுன. கடும் வெயில எரித்தது. பெணகளெல்லாம் ஒரே குரலில், தடாகத்தில் நீராடிக்கொண் டிருந்தவர்களைப் பார்தது, விரைவில் மேலே எழுந்து கரைக்கு வந்து சேரும்படிக கூறினர்கள.

பெணகளின் குரலைக் கேட்டதும், பாண்டவர்கள் தடாகத்திலிருந்து விரைநது கரையேறினர். ஆனுல் பிறவிக கடலிலிருந்து எண்ணற்ற மனிதப் பிறவிகளைக் கரையேற்றிக் காத்தருளும் அந்தக் கண்ணன் மட் டும் இன்னும் கரையேறவில்லை. அவர்மட்டும் இன்னும் அநதத் தடாகத்து நீரிலேயே நின்று தத் தளிததுக கொண்டிருந்தார்.

"அன்பிற்குரிய கண்ணு! விளையாடி யது போதும். கரையேறி வா. உண வுணணும நேரம் நெருங்கி விடடது. இதோ நம் பெண்கள் எல்லாரும் நீண்ட நேரமாகக் காத்துக் கொணடி ருக்கிருாகள். அவர்கள் இனியும் பசி தாங்கமாட்டார்கள். எனவே நீ விரைநது வநது விடு!" என்று தரு மர் குரல் கொடுததார். தொடர்நது சகோதரர்கள் நாலவரும்வேணடினர். ஆயினும பரமாதமா மட்டும நினற இடத்தை விட்டு அசையவில்லை. வாய் திறந்து எவவிதமான பதிலும் கூறவில்லை.

இதைக கண்ட அனைவரும் மிகவும் வியப்படைநதனர். என்ன காரணத் தால் கிருஷ்ணர் மேலே வர மறுக்கி ருர் என்று யாருக்கும எதுவும் புரிய வில்லை. அதே நேரத்தில் திரெளபதி யின நுண்ணறிவில் மட்டும் ஒரு மின் னல் கீற்று போல ஓா எண்ணம் பளிச் சிட்டது. ஆபத்பாநதவனை அந்தப் பரமாதமாவும இப்போது வெளியே சொல்ல முடியாத ஒரு ஆபத்தில் இருக்கிருா என அவளது உள்ளு ணர்வு உணாத்திறறு. உடனே செயலபட்டாள்.

தான் உடுத்தியிருந்த புடைவை யின் முன்றுனையிலிருந்து சிறிதளவு துணியைக் கிழிததுச சுருட்டி தடா கத்தை நோக்கி வீசினுள். உண்மை யாகவே திரெளபதியின யூகம் சரி யாக இருந்தது.

---

திரு. கு. சண்முகசுந்தரன்,
சென்னை.

---

கண்ணபிரான் உற்சாகமாக நீந்திக் குளித்து விளையாடிக் கொண்டிருந்த வேளையில அவரையுமறியாமல அவ ரது கெளபீனம் (உள்ளாடை) நழு விச் சென்று விட்டது. அந்தச் சிறு துணி இல்லாமல் தடாகத்தை விட்டு வெளியே வர இயலாமல அல்லற்பட் டார். வெளியில் சொல்லவும கூச் சப்பட்டார். அநத நேரத்தில் அவ ருக்கு இளவயதில் தாம் கோபிகா ஸ்திரீகளின் ஆடைகளைக கவர்ந்து சென்று விளையாடியபோது அவர்கள் எப்படித் தவிததிருப்பார்கள் என்ப தை நினைவுபடுத்திப் பாாத்து அதற் காக மனதார வருந்தினா.

நமக்கும தெய்வத திருமறை தந்த திருவள்ளுவா கூறிய குறட்பாவினை நினைவுபடுத்திப் பார்க்கத் தோன்று கிறது.

பிறாக்கினனு முற்பகல் செயயின
தமககினனு
பிறபகல தாமே விளையும.

என்ற குறள மேற்கண்ட காட்சியை அழகாகப் படம் பிடித்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளது என்பதில சிறிதும் ஐயமில்லே.

ஆனல் அதே நேரத்தில் கண்ணன, திரௌபதியின ஆழ்ந்த அறிவுக கூர் மையை எண்ணி வெகுவாக வியநது பாராட்டினர்.

திரௌபதி வீசிய துணியை எடுத்து உடுத்திக் கொண்டு கரை யேறிய கண்ணன், திரௌபதியைக் கண்டு அன்பும, நன்றியும், பரிவும கலந்த குரலில கூறினர்.

"அன்புச சகோதரி! என்னதான் நான வீரமும் சாமர்த்தியமும்மிகுநத ஆண் மகனுக இருந்தாலும், சாண அளவு துணியில்லாமல் அல்றறப்பட நேர்நதது. அந்தச் சமயத்தில் அதைப் புரிந்து கொணடு துணியைக் கிழித்து வீசி என துன்பத்தை நீக்கினாய். இதேபோல, உனக்கு எப்போ தாவது ஏதேனும இப்படி ஒரு துன பம் நேருமானல நான ஓடோடிவந்து உன துன்பத்தைத் துடைப்பேன்" என்று கூறினர். பிறகு எல்லாரும் அரணமனையை அடைந்து விருந் துணடு மகிழ்நதனர் சில நாட்கள கழிததபின கணணனும் விடைப பெற்றுச் செனருர

ஆணடுகள் பல உருணடோடி மறைநதன. ஆயினும் அனுதரட்சக னை பரமாதமாவின் நெஞ்சிலிருந்து இந்த நிகழ்ச்சிமட்டும் மறையவில்லே.

இதோ இனனெரு காட்சி.

துரியோதனனின் அரசவையிலே திரௌபதி தலைவிரி கோலமாக நிறகி ருள். பலரும் நிறைந்த அநத அவை யில, பஞசமா பாதகஙகளுககு அஞ் சாத பாவியான துச்சாதனன், துளி யளவும நெஞ்சில் இரக்கமோ கூச்ச மோ இல்லாமல், அநத மாதரசி திரௌபதியைப் பற்றியிழுத்து அவள உடுத்தியிருநத துகிலேக களேய முற் படுகிருன.

அந்த நிலையில், ஆதரவற்ற பெண ணுகத் தவிததுத் ததத்ளித்த திரௌ பதி, கணகளிலிருந்து ஆறுக நீர பெருக, "கணணு, கணணு" என்று கதறுகிருள.

ஆபத்பாநதவனும, அனுதரட்சகனு மானகணணன அதோ கடுகிவிரைநது வநது விட்டான். உதவியும் தந்திட் டான்.

என்னே விந்தை!

திரௌபதியின உடலிலிருந்து துகி- லேப்பற்றி இழுதது இழுத்து, மலே போல் குவித்துக்கைசோர்ந்தான் துச் சாதனன். திரௌபதியின் துகில் நீண்டு வளர்ந்து கொண்டிருநததைக கணடு அனேவரும் வியந்தனர்.

இககட்டான நிலையில் தன் கூக குரலேக கேட்டு ஓடோடி வந்து தன் மானத்தைக காத்த கணண பரமாத மாவைக் கணணீர் மல்கக்கும்பிட்டுத் தொழுதாள், திரௌபதி.

அன்றொரு நாள தனக்கு உதவிய போது அவளிடம் சொன்ன வாக்கை இன்று நிறைவேறறி விட்டார் பக வான்.

ஒரு மாஙகொட்டையை மணணில விதைததால அது மரமாகிப் பலநூறு மாங்கனிகளேத திரும்பத் தருகிறது. தெனனேக்குத் தண்ணீரை விட்டு வளர்த்தால் அது வளர்ந்து இளநீரை யும் தேஙகாய்களேயும நமககுத திருப் பித் தருகிறது. அதுபோல நாம் ஒருவருக்குச் செய்த சிறு உதவியும, பல மடஙகாகத் திரும்பி வந்து பயன் தருமே தவிர சிறிதும் வீண்போகாது என்ற தததுவத்தையே பகவான் மேற்கண்ட வகையில் உணர்த்தி விட்டார என்பதே உண்மை. ★

## குழந்தைக்கு நாமகரணம சூட்டவேணடிய நாள் எது?

கர்ப்ப காரணனை தந்தை, குழநதை பிறந்த பதது அல்லது பன்னிரண்டாம நாள நாமகரணம் செய்ய வேணடும். அல்லது வளர் பிறைப் புண்ணிய தினத்தில நல்லோரை யொனறில் நன்மீனுலவும காலே யில் செய்யலாம

## யுக தர்மம் எனருல் என்ன?

ஒவ்வொரு யுகத்திற்கும ஒவவொரு தர்மம இருந்திருககிறது.

கிருத யுகத்தில் மாந்தாகள் கடுநதவம செய்வதே தர்மமாகக கருதபபட்டது. எனவே கிருத யுகத்தில் தவசிகள் அதிகம் இருந்திருக் கிருர்கள்.

திரேதா யுகததில் ஆனம ஞானம் தர்மமாக இருந்தது. எனவே ஞானிகள அதிகமபேர் அநத யுகததில தோனறினர்கள்.

துவாபர யுகததில் வேள்விகள் செய்வது தர்மமாக இருந்தது. எனவே நிறைய வேள்விகள நடததபபட்டன.

கலியுக தாமம என்ன தெரியுமா? மற்றவர்க்குத தாராளமாய் கொடுப்பதுதான்.

கலியுக தர்மமான நம்மிடம் இருப்பதில ஒரு பகுதியை மறற வர்க்குத் தாராளமாய் கொடுதது யுக தர்மத்தைக் கடைபிடியுங்கள்.

ஆதாரம: மநுதாம சாஸதிரம் முதல அத்தியாயம் விதி 86.

தகவல்: க. இராமலிங்கம்-புதுககோட்டை.

# திருமலையில் அரிய புவியியல் வளைவு

**கோயிலின் அமைவிடம் :**

ஏழுமலையான் என்று பெரும்பான்மையோரால் வணங்கப்படும் ஸ்ரீவேங்கடேஸ்வரர் எழுந்தருளியிருக்கும் புனிதத் தலமான திருமலைக் கோயில், திருமலைக் குன்றுகள் என்றழைக்கப் படும்படியான சுருண்டு விளங்கும் குன்றுகளின் ஏழு முக்கியச்சிகரங்களில் ஒன்றாக அழைக்கப்படும் சேஷாசல சிகரத்தில் அமைந்துள்ளது. இப்பகுதி தென் இந்தியாவில் 13-14 வட அக்ஷ ரேகைகளுக்கும் 79 கிழக்கு தீர்க்க ரேகைக்கும் இடையில் உள்ளது.

ஆந்திர மாநிலத்தின் வடகோடியிலிருந்து கடற்கரை ஓரமாக வரும் கிழக்குத் தொடர்ச்சிமலை கிருஷ்ணா நதியைக் கடந்தபின், உள்நோக்கி இணை தொலைவான பல தொடர் குன்றுகளாகப் பிரிகின்றது. அவற்றுள் இரண்டாவது தொடர் ஒழுங்கில்லாத ஒரு கூட்டமாக அமைந்து, கிருஷ்ணாவில் ஆரம்பித்து, கர்நூலுக்குக் கீழே, ஓர் அரை வட்டமாகக் கடப்பை மாநிலத்தின் வழியாகச் சென்று, சிறு சிறு குவியல்களாகப் பிரிகின்றது. அவற்றுள் ஒரு பகுதியே சேஷாசலக் குன்றுகள் என்றழைக்கப்படுகிறது.

சங்க காலத்தில் இப்பகுதி தமிழ் நாட்டிற்கும், வடுக நாட்டிற்கும் (இன்றைய கன்னடம் தெலுங்கு மொழிகளைப் பேசும் பகுதி) எல்லை நிலமாக விளங்கியது. ஸ்ரீ வேங்கடேஸ்வரர் நின்றருளும் கோயிலைக் கொண்டு விளங்கும் இக்குன்று உண்மையில் மிகவும் ஆழமான இடத்தில் அமைந்து, சுற்றிலும் உயரமான பல்வேறு குன்றுகளைக் கொண்டு, ஏதோ ஓர் உட்குழிவான பள்ளத் தாக்கில் அமைந்திருப்பது போல் காட்சியளிக்கிறது. கோயில் இருக்கும் இக்குன்று கடல் மட்டத்திலிருந்து 3426 அடி உயரத்தில் உள்ளது.

**புவியியல் அமைப்பு :**

இப்பகுதியின் புவியியல் அமைப்பு அதாவது இம்மலைக்குன்றுகளானது எளிதில் பிளவுறும்படியான களிப் பாறை வகைகளை இடைச் செருகல்களாகக் கொண்டு, படிகக் கற்பாறை வகைகளால் அமைந்த இடமாக விளங்குகிறது. இதற்கு நகரி படிகக் கற்கள் என்று பெயர். இக்கற் வகைகள், திருமலைக் குன்றுகளின் அடித்தளமாக விளங்கும் கருங்கல் மற்றும் அடுக்குப்பாறைகளின் மேல் அமைந்துள்ளன. இந்நகரி படிகக் கற்கள் கடப்பை வடி நிலத்தின் பெரும்பகுதியாக விளங்கி, மேலும் இப்பாறைகளுடன் விளங்கும் இப்பகுதி அரை வட்டமாக அமைந்து மேற்கில் துரோணாசலம் வரையிலும், வடக்கில் ஸ்ரீசைலத்தைத் தாண்டிக் கொண்டும், வடகிழக்குத் திசையில் ஐக்கையா பேட்டை வரையிலும், கிழக்கில் வினுகொண்டா, உதயகிரி, வெங்கடகிரி ஆகிய பகுதிகளைத் தொடர்ந்து செல்லும் வெளிகொண்டா மலைத்தொடர்கள் வரை பரந்துள்ளது.

அப்படிகக்கற்படுக்கைகளின் மேல் இயற்கையால் நிறுத்தப்பட்டுள்ள சுவற் போன்ற கற்சக்கைகளின் உருவ அமைப்புக்கள், தோற்றங்கள், மலைக்கு வரும்படியான யாத்திரிகர்களின் கண்களுக்கும், கருத்திற்கும் இயற்கைக் காட்சிகளாக விளங்குகின்றன. இப்படிகக் கற்கள் பொதுவாக பெரிய அளவில், பளிங்குத்தன்மை கொண்டு விளங்குகின்றன. இப்படிகக் கற்பாறைகள், வெளிறிய சாம்பல் நிறத்தையும் பலவேறுபட்ட வானிலை காரணங்களால் இளம் பழுப்பு நிறத்துடனும் மற்றும் மஞ்சள் அல்லது செம்மஞ்சள் நிறத்துடனும் விளங்குகின்றன. இக் கற்பாறைகளின் அதாவது சக்கைப் போன்ற உட்பக்கச் சரிவுகள் தெற்கு நோக்கி உள்ளன. சில இடங்களில் செங்குத்தான கற்சுவர்களையும் பார்க்கலாம்.

> இக்கட்டுரை ஆசிரியர் மறைந்த டாக்டர். என். ரமேசன் அவர்கள் ஆந்திர மாநில (ஹைதராபாத்) தொல்பொருள் ஆராய்ச்சி மற்றும் அரும் பொருட்காட்சி அகத்தின் இயக்குநராகவும், தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவராகவும் பணி புரிந்தவராவர்.

**அரிய புவியியல் வளைவு :**

இயற்கையின் சீற்றத்திற்குப் பல்வேறு கால நிலைகளில் தாக்கப்பட்டும் அவற்றினைத் தாங்கிக்கொண்டு, புவியியல் வல்லுநர்களால் சுமார் 100 கோடி ஆண்டுகளுக்கு முன் தோன்றியிருத்தல் வேண்டும் என்று கருதப்படும் வளைவு ஒன்று இன்றைக்குச் சுமார் 15 ஆண்டுகளுக்கு முன்பு திருமலையில் கண்டு பிடிக்கப்பட்டது. இவ் இயற்கை வளைவுப்பாலம் திருமலைக் கோயிலுக்கு வடக்கே 1 கி.மீ. தொலைவில், மேற்கில் 60° கோணத்தில் திருமலைக்குன்றில் உள்ள "நுண்ணலை அதிர்வு" நிலையத்திற்குப் போகும் சாலையில், அணு நம் வகையில் அமைந்துள்ளது. இவ்வளைவின் முழு இடை நீளம் 25 அடி, உயரம் 10 அடி. திருமலைக் குன்றுகள் அமைந்துள்ள கடப்பா கற்பாறைவகைகளைச்சார்ந்த நகரி படிகக்கற்களால் இவ்வளைவு உருவாகியுள்ளது.

இயற்கையால் எழுப்பப்பட்ட இது போன்ற வளைவுகள் இரண்டு மட்டுமே உலகத்தில் இருக்கின்றன. ஒன்று அமெரிக்காவில் உள்ள 'உடா வானவில் வளைவுப்பாலம்". மற்றையது இங்கிலாந்தில் இருக்கும் டால்ரேடியன் படிகப்பாறைகளின் நிலக் கூம்புப் பகுதியில் உள்ள வளைவாகும். இவை

யிரண்டும ஏறகெ..வே உலகிற்கு அறி முகமாகிய, புகழ்பெற்ற வளைவுகள் இப்போது கணடு பிடிககபபட்டுள்ள இவ்வளைவு உலகததில் மூனறுவதும, ஐரோப்பாவிலும, ஆசியாவிலும முத லாவதுமாகும்.

**வளைவு உருவாகியதறகான சாத்தியக கூறுகள் :**

சாதாரணமாக இவ்வளைவுகள் படி கக்கற்பாறைகளின் மேல் இயறகை யின் கைவணணத்தால் உருவாககப் பட்ட சிற்பங்களேயாம். திருமலையில் உள்ள இவவளைவு, முன்பு ஒரு காலத் தில் ஏற்பட்ட கடலலைகளின் அரிப் பின் காரணமாக விளை நத பயனேயாம் என்று சில வல்லுநர்கள் கருதுகினற னர். எனினும் அப்பகுதியை ஆராயச்சி செய்தவிடத்து, பல்வேறு காலங்களில ஏறபட்ட தீவிர வானிலை காரணமாக வும், படிகப் பாறைகளின் மேல பன்னெடுங்காலமாக ஏற்பட்ட மழை நீரின் அரிப்பினுலும் இமமலைப்பகுதி யின் ஒருபகுதி செதுக்கப்பட்டு, சில மூட்டிணைப்புத் தொகுதிகளின் உதவி யினுல் இவவளைவு உருவாகியிருத்தல் வேண்டும் எனறு நம்பப்படுகிறது.

**நிலைநாட்டபபெறுத புவியியல் துணிபு :**

திருமலைக்குன்றுகளில் காணப்படும் விந்தையான புவியியல் அமைப்புகளை ஆராய்நதபோது இவ்வளைவு கணடு பிடிக்கப்பட்டது. 'எபார்ச்சியின அன்கனஃபார்மிடி' (Eparchaen Unconformity) எனறு அழைக்கப் படும் இவ் அரிய புவியியற்கூறுகள் திருமலைக்குன்றுகளின் ஓர் இடை நிலப்பகுதியில் உள்ளன. இவைகளுக்கு அடிததளமாக விளஙகும் அடுககுப பாறைகளுடன கூடிய கருஙகற்குன்று கள் கடபபைப பாறை வகைகளைச் சாரநத நகரி படிககக்றகளுடன கூடிய தாக விளஙகி, அதனூடே கூழாங்கற் களால் உணடான பாறை வடிவமைதி கள் ஏறககுறைய ஒரு அடி உயரததில திரணடு சுமார் 80 கோடி ஆண்டுகள் பழமை கொணடதாக விளஙகுகிறது. இவ்வமைபபு நாட்டிலுளள ஒரு அரிய புவியியல் தோற்றமாகும். திருமலைக குன்றுகளின் அடிததளத்தின் அடிப் படை நிலமாக விளங்கும ஏரி பாறைகளின ஊடே கொணடு விளஙகும கருஙகற் அடுககுபபாறை கள் சுமார் 250 கோடி ஆண்டுகள் பழமை கொணடவை. அவற்றின மேல் உள்ளகடப்பைப்பாறைவகைகள் ஏறைககுறைய 170 கோடி ஆணடுகள முனனா தோன்றியிருக்கலாம். அவற் றில அமைநத நகரி படிகக் கறபாறை களின காலம 150 கோடி ஆணடுகள எனலாம். இப்பகுதியில் உள்ளபடி இயற்படுகைப் பாறைகளுககும் அடித தளத்திற்கும் இடைபபட்ட கால இடை வெளியே 'எபார்ச்சியன் அன கனஃபார்மிடி' எனும இவ அரிய புவி யியல் அமைப்புத் தோறறத்தை உரு வாக்கியுள்ளது. இவவரிய வளைவுப் பாலம, மலையின சமவெளிப்பரப் பிறகு இட்டுச செலலும முனைப்பி லிருந்து புதிய மலைவழிப் பாதையில் 18வது கிலோ மீட்டரில் உளளது.

**தேசிய புவியியல் நினைவுச சின்னம :**

இவ்வளைவினை ஒரு தேசீய புவியியல் நினைவுச்சின்னமாக பிரகடனப்படுத்து வதென்று முடிவு செய்யப்பட்டுள் ளது. நாட்டில இதுபோன்ற இயற்கை எழுப்பிய வளைவுகள் 13 உள்ளன. இது 14-வதாக விளங்குவதோடுமட்டு மினறி, ஆசியா மற்றும் ஐரோப்பா கண்டங்களில் இதுவே மிகப்பழமை யான அதாவது 250கோடி ஆண்டுகள் வயதான, ஒரு இயற்கை வளைவாக விளங்குகிறது.

(திருமலை திருப்பதி தேவஸ்தானம், தறபோது இத்தேசீய நினைவுச்சின்னத் தைப் பாதுகாககும பொறுப்பினை ஏறறுக கொணடுள்ளதைத் தொடாநது கீழ்வரும ஏற்பாடுகள மேறகொள்ளப்பட்டுளளன.

தற்போது இவவளைவினைச் சுற்றி வேலி அமைககபபட்டு, மலர்த தோட்டம் ஒனறும உருவாககப்பட் டுள்ளது. இவவளைவு தூர்ந்து விடா வணணம் பாறை இடுககுகள் அரைச் சாநது கொணடு மெழுகப்படடும, வளைவு விழுந்துவிடாவணணமதகுநத கடடமைப்புகளுடனும நிறுத்தப் படடுள்ளன. வளைவுக்குச செல்ல சீரான பாதை ஒன்று வேயபபட்டுள ளது. இதனைப் பற்றிய முழு விவரங களுடன கூடிய அறிவுப்புப் பலகை கள திருமலையில் பல இடங்களில வைக்கப்பட்டுள்ளன. தி. தி. தேவஸ தானம தன நேரடிப் பொறுப்பில் இவவளைவினை பராமரித்து வருகின றது.)

தற்போது இவவரிய வளைவினைக காண நூற்றுக்கணக்கில பக்தாகளும, யாத்திரிகர்களும வநதவணணம உளளனா. மனித குலத்தின மேன் மைக்காக ஸ்ரீ வேங்கடேஸவரர் ஸவயமபு உருவததில் திருமலையில் தோனறியதாக புராணங்கள கூறு கின்றன. கோயிலில உள்ள இறை வனின துருவமூர்த்தியின் உயரமும இவ்வளைவின் உயரமும் ஒரே அளவாக இருப்பதுவிந்தைமிகு நிகழ்ச்சியாகும் மேலும் இவ் அணடத்தின நாயகனை இறைவன் முதலில் திருமலையில் ஒரு மாபெரும் சக்தியாக உருவெடுத்து இறங்கி, பினனர் மலையினை உடைத் துக கொண்டு இவ்வளைவிலிருந்து வெளிவநது, பிறகுமெதுவாகத் தன தெய்வீக சகதிகளை அடககிக்கொண்டு இநத அரியபுவியியல் படிகக்கற்பாறை களின பாதையின் வழியாக வந்து, தற்போது, கோயிலில் புகமுடனும், ஒளியுடனும் நினறவணணம அருள் புரியும் இடத்திற்கு வநது நிலையெய் தினர் என்று நம்பப்படுகிறது. எதுவா யினும், இறைவன் திருமலையில் ஸவ யம்புவாக உருவெடுத்தார் எனற நம்பிககைக்கு இவவரிய வளைவும, அது இடம பெற்றுள்ள புவியியல அமைபபும் முககியத்துவம் தருகின றன என்பதை மறுக்க முடியாது.

(தமிழாககம் : உமாராம.)



# முழு முதற் பொருள் விநாயகர்

பிள்ளையார் அல்லது விநாயகா என்று சொன்னாலே சிறு குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை தெரிந்த பழக்கமான கடவுளாவார். இக்கடவுளானவா மற்றய தெய்வங்களைககாட்டிலும் ஒரு வசீகரத் தனமையுடையவர். காரணம, அவருடைய யானையின தலையும் கழுத்திற்கு கீழ் மனிதனுடைய உருவம்தான்.

பிள்ளையாரது தோற்றததின கதைகள (புராணங்கள) அநேகம இருப்பினும் ஒவ்வொரு விளக்கமும் ஒவவொரு தததுவத்தை விளககவலலது. விநாயகரது தோற்றம் பறறிய விளககங்கள் இஙகுக கூறப்படாவிடினும் அவருடைய தத்துவ விளககமும், சிறப்பும் இங்குப் பெரிதும் விளக்க இக்கட்டுரை முனவந்துள்ளது.

கிராமக் கடவுள :

கிராமத் தெயவம அநேகம இருப்பினும விநாயகருககு ஒரு தனிச சிறப்பே. குளககரையிலும, அரச மரத்தடியிலும, கோயில்களின் முகப்பிலும், நதிககரைகளிலும, கிராமத

திரு. எஸ் நாராயணசுவாமி,
M A , B Ed
இனனமபூர்

தின எல்லை ஆரமபத்திலும காணபதே ஒரு சிறப்பு ஆகும். ஒவவொரு செயலையும ஸ்ரீ கணபதியை வழிபட்ட பிறகே ஆரமபித்தல அக்காலம் தொட்டு இக்காலம வரை இருந்து வருகின்ற ஒரு சிறப்பம்சமாகும்.

வீடுகளில விசேஷ காரியஙகளில கணபதியை மஞ்சளினாலும் சாணத்தினாலும் மிக எளிதாகவும், எளிமையாகவும் அமைத்து (பிரதிஷடை) அருகு சாததி வழிபடுவர். மேலும் அசுப காரிய விசேஷமாக இருந்தாலும் விநாயகரை வழிபட்ட பிறகுதான் தொடஙகுவா.

ஷணமதஙகள் :

ஸ்ரீ பகவத் பாதாள் ஆகிய ஸ்ரீ ஆதி சஙகரா ஆகியோா காலததில் எணணறற சமயங்கள் இந்நாட்டில் மலிநதிருந்தன ஞான முனியான ஸ்ரீ சஙகரா அவற்றை ஆறு சமயங்களாக நமக்கு வகுத்து அருளினார். அவையே ஷண்மதமாகும். அவையாவன; 1. சைவம், 2. வைஷ்ணவம், 3. கௌமாரம், 4. காணபத்யம், 5. சௌரம், 6. சாக்தம்.

1. சிவனை முழுமுதற் பொருளாக உடையது சைவமாகும். 2. ஸ்ரீமந நாராயணனை முழுமுதற்பொருளாக உடையது வைஷ்ணவமாகும். 3. முருகனை உயர்த்திச் சொலவது கௌமாரமாகும. 4. ஸ்ரீ மஹா கணபதியை உயர்த்திச சொல்வது காணபத்யமாகும். 5. சூரியனை வழிபடுபவர் சௌரமானர். 6. ஸ்ரீகாளியை வழிபடுவர் சாகதா.

இதனுள் விநாயகருககு என்ன ஒரு தனிசசிறப்பு என்றால எந்தத் தெய்வததை ஆராதனை செய்தாலும் விநாயகரைத் தொழுத பிறகுதான மற்றைய கடவுள்களை வழிபடுவது என்பது தனிச்சிறப்புக கொளகையாகும இது நமது இந்துமத சம்பிரதாயததில இருநது வருவதாகும்.

கோயில்களில் விநாயகருக்கு ஒரு தனிச்சிறப்பு கொடுத்து வழிபடுதல போற்றுதலுக்குரிய விஷயமாகும. விநாயகர் ஒவ்வொரு க்ஷேத்திரத்திற்கும் ஸ்தல விநாயகர் என்ற அமைப்பினை எல்லா சிவாலயங்களிலும் பிரதிஷ்டை செய்து வழிபடுகின்றனர். திருக்கோயில்களின் கோஷ்டத்திலும் ஆவரணங்களிலும, கோபுரங்களிலும் விமானங்களிலும், தூண்களிலும் இவர் விளங்குவார். ஏகதின உற்ஸவம, பவிததோற்ஸவம, ரதோற்ஸவம், பிரமமோற்ஸவம, திருக் கலயாண உற்ஸவம், சகோபுரம் முதலான பிரபல்ய விசேஷ உற்ஸவங்களில் முதன முதல் ஸ்ரீ விநாயகரை ஆராதனை செய்தும் விநாயகரை மூஷிக வாகனததில எழுந்தருளச் செய்வதும் விசேஷமாகும.



மூாததி விளக்கம .

விநாயகரது உருவமே பிரணவத்தின் சொரூபமாகும். ஞானமே வடிவெடுத்தவர் கணபதி ஆவாா. இவர் நான்கு திருக்கரங்களை உடையவர். மேல் இருக்கைகள் முறையே பாசம், அங்குசம் முதலிய கொண்டும் கீழ் கரங்களில் மோதகம், ஒடிந்த தந்

தத்தையும்உடையவர் ஆவர். துதிக் கையுடன் சேர்த்து கரஙகள் ஐந தாகும். அவரது வாகனம மூஷிக வாகனமாகும

பாசம் எனபது கயிறு அல்லது கட்டு. இதன் விளக்கமாவது ஜீவர் கள் உலகம் என்று பநதத்தால் கட் டுணடு மாயையே பெரிதெனக் கருதி உண்மையென நினைதது அதில் உழனறு பரம்பொருளை நினையாது இருககின்றவர்களைத தனது அஙகுச மூலமாகத் திருத்தி, பர நிலையை அடையச் செயவதே அதன் நோகக மாகும்

கையில் மோதகம வைததுள்ளாா. இம்மோதகத்தின் உள்ளே பூரணம அமைநதுள்ளது.

மேலும் வலது கையில் ஒடித்த தந தத்துடன விளங்குகின்ருா. இது எத னைக் குறிக்கின்றது என்ருல், வித்தை யும், பராக்கிரமத்தையும், அபய மளித்தலையும் விளக்குகினறது.

**மூஷிக வாகனன :**

பராசர முனிவர் வேண்டுதலுக கிணஙக பெரிய எலி ரூபமான கிரௌஞ்சன் என்ற கந்தர்வனை அடககி அவனையே வாகனமாக அமைததமையால் மூஷிக வாகனன என வருவதாயிற்று.

**ஆகமஙகளில் சொலலப்படும விநாயகரது ஆயுதங்கள் !**

விநாயககர் 29 ஆயுதங்களைத் தரித் தவர் ஆவா. அவையான: 1. பாசம் 2. அங்குசம, 3. தந்தம். 4. வேதா ளம், 5. சக்தி (வேல), 6. அமபு, 7. வில், 8. சக்கரம், 9. கத்தி, 10. கேடயம், 11. சம்மட்டி, 12. கதை 13. நாகபாசம, 14. சூலம, 15. குந தாலி, 16. மழு, 17. கொடி, 18. தணடம, 19. சமணடலம், 20. பாசு 21. கரும்பு வில, 22. சங்கம், 23. புஷ்பபானம், 24. கோடரி, 25. அக்ஷமாலை, 26. சாமரம, 27. தீ அகல், 28. நடடுவாஙகம், 29. வீணை முதலியன ஆகும்.

விநாயகருக்கு மூன்று கண்கள். வலது, இடது பக்கம் இருப்பவை சூர்ய, சந்திர கண்களாகும். நெற்றியில் கண் இருப்பது அக்னியைக் குறிப்பது ஆகும். இதனையே ஞானக்கண் என்பர்.

இவரது பேழை வயிறு எதனைக் குறிக்கின்றது என்றால் அண்ட சராசரங்களைத் தனனுள்ளே அடக்கி வைத்துள்ளார் என்றும் அவைகள் சக்தியின் ஆட்சியில் இருக்கின்றது என்பதால் தனது பேழை வயிற்றினை சர்ப்பம (பாம்பு) கொண்டு கச்சை போல கட்டிக கொண்டுள்ளார் எனபதும சாலப் பொருத்தமாகும்.

சொல் விளக்கம :

வேதங்களில் "க" "ர" என்று சொன்னாலே கணபதியைக் குறிக்கும் என்பர். "க" என்பது ஞானத்தையும் "ண" என்ற எழுத்து மோக்ஷத்தையும், பதி என்பது கடவுளையும குறிக்குமாகும். ஆகவே இதனுள் தெரிவது ஆன்மாக்களுககுப் பதியாகிய இவர் ஞானத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கவல்லவர் ஆவர்.

அடுத்து விநாயகர்என்ற சொல்லில் 'வி' என்ற சொல அற்றஎனபதனையும் "நாயகன்" என்ற சொல் தலைவன் என்பதனைக் குறிக்கின்றது. ஆகவே அவருக்கு நிகர் அவரே என்றும், அவருககு நிகரான தலைவன் வேறொருவரும் இல்லையெனவும, தலைவனுக்கு எல்லாம் தலைவன் என்றும் பொருள் படும்.

விநாயகரது நைவேத்யம் :

மோதகம், அவல், கடலை, நெற பொரி, சத்துமா, கருமபு, தேங்காய, நாவற்பழம், மாதுளம்பழம், வாழைப் பழம், மாம்பழம், பலாப்பழம் முதலியவாகும.

சிற்பங்களில் கணபதி :

சிற்ப சாஸ்திரங்களில் இக் கணபதி உருவத்தினை முப்பத்திரண்டு வகைகளாக எடுத்து வடித்துள்ளனர். அதிலும குறிப்பாக 1 முதல் 16 வரையிலான கணபதிஉருவங்களை ஷோடச கணபதிஎன்று கூறி சிறப்புசெய்கின்றனர். இந்த 16 கணபதிஉருவங்களும ஸ்ரீ ராமேஸ்வரத்தில் உள்ள ஸ்ரீ சங்கர மடததில சிலை ரூபமாக ஒரே தூணில அமைநதிருக்கின்றன என்பதுஒருசிறப்பம்சமாகும. இது முத்கல புராணத்தில் உள்ளது.

1. பால கணபதி, 2. தருண கணபதி, 3. பக்த கணபதி, 4. வீர கணபதி, 5. சக்தி கணபதி, 6 துவஜ கணபதி, 7. சித்தி கணபதி, 8. உச்சிஷ்ட கணபதி, 9. விகனராஜ கணபதி, 10. ஷிப்ர கணபதி, 11. ஹேரம்ப கணபதி, 12. லட்சுமி கணபதி, 13. மகா கணபதி, 14. விஜய கணபதி, 15. நிருத்த கணபதி, 16. ஊர்த்துவ கணபதி. (இவற்றை ஷோடச கணபதி என்கின்றனர்.) 17. ஏகாட்சர கணபதி, 18. வரகணபதி, 19. திரிசட்சரகணபதி, 20. க்ஷிப்ரபரசாத கணபதி, 21. அரித்ர கணபதி, 22. ஏகதந்த கணபதி, 23. சிருஷ்டி கணபதி, 24. உத்தண்ட கணபதி, 25. ரிணமோசக் கணபதி 26. துண்டிகணபதி, 27. துவிமுக கணபதி, 28. திரிமுக கணபதி, 29. சிம்ம கணபதி, 30. யோக கணபதி, 31. துர்க்கா கணபதி, 32. சங்கர கணபதி முதலானவைகள் இருப்பினும விநாயகருக்கு ஆயிரத்துககும் மேற்பட்ட நாமாக்களும் வடிவங்களும் இருக்கின்றன.

உருவம அமைத்தல ;

ஸ்ரீ மகா கணபதியின ரூபம சகுண ரூபமாகும். (எல்லா குணங்களும உள்ள ரூபம) சிற்ப சாஸ்திரப்படி விநாயகருக்கு நான்கு கரங்கள் முதல் பன்னிரண்டு கரங்கள் வரை அமைக்கப்படுகின்றது. இவரது ரூபம பச்சைக்கல், பொன், வெள்ளி, நல்ல அத்தி, வெள்ளெருக்கு, களிமண், மஞ்சள்,மற்றும்சாணத்திலும்இவரது உருவம் தற்காலிக பூஜைககு மட்டும் செய்து கொள்வதாகும். தூர்வா என்று சொல்லப்படும் அருகம்புல்லினாலும், பஞ்ச வில்வங்களினாலும், செவ்வரளியினாலும், தாமரை இதழ்களினாலும் பூஜை செய்வது மிகச் சிறப்பு வாய்ந்ததாகும்.

வைஷ்ணவத்தில் இரு பிரிவுகளாகக் கூறப்படும் "வடகலை" மற்றும் "தென்கலை" சம்ரதாயங்கள் உடையவர்கள் ஸ்ரீ விநாயகரை ஆழ்வாராகவே பூஜிக்கின்றனர். இந்த ஸ்வருபத்தை விஷ்வக்ஸேனர் என்பர்.

தேவி மஹாத்மியம் :

சர்வ லோக மாதாவாக இருக்கின்ற ஷாக்ஷாத் பரமேஸ்வரி துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்யுமிடத்திலும் ஸ்ரீ விநாயகரது சிறப்பு உயர்த்திக் கூறப்படுகிறது.

ஸ்ரீதேவியினுடைய ப்ரபாவத்தைக் கூறவல்லது ஸ்ரீ தேவி பாகவதம் அல்லது தேவி மஹாத்மியம் என்பர் சிலர். அசுரர்களான மது கைடபர்களை சம்ஹாரம் செய்யப் புறப்பட்ட தேவியானவள் போர்க்களத்தில் அசுரர்களது பராக்ரமசக்தி அதிகமாக இருப்பது கண்டும் இதன் காரணம் பற்றி தெளிவு பெற்ற போது தாம் ஸ்ரீ விநாயகரை ஆராதனை செய்து அவரிடம் சங்கல்பித்துக் கொள்ளாததும் தெரிந்தது. அதன் காரணமாக ஸ்ரீ ஆதிபராசக்தியானவள் மறுபடியும் போருக்குச செல்லும் போது சர்வலோக ரக்ஷகனுகவும் எலலா விக்னங்களை அகற்றுபவனுகவும், சித்தி, புத்தி ஆகிய இரு சக்திகளை உடையவனுகவும் அண்டசராசரங்களையும் தனனகத்தே அடக்கியவனும் தலைவனுக்கு எல்லாம் தலைவனுக இருக்கின்ற ஸ்ரீ விநாயகரை பூஜிததும் வலம் வந்தும் நைவேத்யம் படைத்தும் சங்கலபித்துக் கொண்டமையால் அசுரர்களது பராக்ரமங்கள் தகர்த்தப்பட்டு அவர்களை நிக்ரஹம் செய்து வானவர்களை வாழ வைததாள் என்பது தேவி மஹாத்மி

யத்தில்கூறப்படும் விநாயக வழிபாட்டின் பெருமையாகும்.

**விநாயகரைப் பறறிய புராணங்களும மறறவைகளும**

ஒவ்வொரு சமய இலககியங்களை படைக்கும முன்பு விநாயகா காப்பு எனற செயயுள அமைப்பது இனறய வரை இருநது வருகினற பழகக மாகும். இருபபினும் விநாயகரைப் பற்றிய நூலகளாவன (1) கணேச புராணம், (2) முதகல புராணம், (3) பவிஷ்ய புராணம், (4) விஷ்ணு தர்மோத்ர புராணம், (5) கருட புராணம், (6) அகனி புராணம, (7) கணபதி உபநிஷத், (8) கணேச கீதை, (9) கசசியப்ப முனிவா எழுதிய விநாயக புராணம.

**சதுாவேதத்தில கணபதி !**

"கணும் த்வா கணபதிம் ஹவாமஹே" எனற ருக்வேத வரியும், கொஞசம் மாறுதலாக யஜுர் வேதததிலும் அதர்வண வேதத்தில் "அதர்வோபநிஷத்" என்ற ஒரு பாகததில் ஸ்ரீ கணபதி தத்துவத்தை முழுவதும் கூறுகிறது.

**தியான ஸலோகம**

**दियान स्लोगम् ।**

**गजाननं भूतगणादसेवतम्**
**कपित्थजम्बूफलसारभक्षितम् ।**
**उमासुतं शोकविनाशकारण**
**नमामि विघ्नेश्वर पादपङ्कजं ॥**

பொருள்: யானை முகததவனை, உயிர்க்கூட்டங்களால் சேவிக்கப்படுபவனை, விளாம்பழ நாவற்பழரசத்தை அருநதுபவனை, உமையின் மைந்தனை, துயத்தைஅழிக்கஏதுவாயிருப்பவனுன விகனஙகளையெல்லாம் அழிப்பவனே உனனுடைய தாமரைத் திருவடிகளில நமஸகரிக்கின்றேன்.

**முககிய நாமாககளின விளக்கம :**

(மறறும சில குறிபபிட்டுள்ளோம்)

**ओं गजाननाय नमः** ஓம கஜானனாய நம - யானை முகத்தை உடையவன.

**ओं एकदन्ताय नमः** ஓம ஏகதநதாய நம - ஒற்றைத் தநதத்தை உடையவன.

**ओं विनायकाय नमः** ஓம் விநாயகாய நம - நன்கு தலைமை வகிப்பவன

**ओं वरप्रदाय नमः** ஓம வரப்ரதாய நம - விரும்பியதைக் கொடுப்பவன

**ओंङ्काररूपाय नमः** ஓம் ஓஙகார ரூபாய நம: ஓம் எனும் மநதிர வடிவினன்

**விநாயகரின மூலமநதரம :**

"ஓம ஹ்ரீம க்ரீம் க்லௌம் கம கணபதயே வர வரத ஸர்வ ஜனமே வசமானியஸ்வாஹா"

**மகா கணபதி காயத்ரி மநதரம் :**

"தத் புருஷாய வித்மஹே வகரதுணடாய தீமஹி தன்னோ தந்திப் ப்ரசோதயாத்."

எலலாம அவனே

சர்வலோக ரக்ஷகனாகவும், ஐநதொழிலுககு அதிபதியாகவும், அணடஙகளை தன ரூபத்தில் பதிததவனும் விரும்பியதை உடன அருள்பவனாகவும், யோகத்திற்கு அப்பாற்பட்டவனும, சித்தி, புததி என்ற இரணடு சக்திகளை ஒருங்கே அமைநதவனும பாசாங்குசத்தைத் தரித்தவனும் ஒடிநத தந்தமும மோதகத்தை உடையவனும் இளமதியை தனது மஹோன்னத கிரீடத்தில தரித்தவனுமான பெருச்சாளியை (மூஞ்சூறு) வாகனமுடையவனும் மஹா வல்லப கணபதியாக இருந்து எல்லோருக்கும லக்ஷ்மி கடாக்ஷத்தை அருள்பவனும் "க்ஷிப்ராசாத்" கணபதியென போறறப்படுபவனுக்கு வரும் செப்டமபா மாதம விநாயக சதுர்த்தி அனறு (4-9-1989) "அவன் அருளால், அவன தாள் வணஙகி" என்ற முதுமொழிககேறபவும நம் மனதில என்றென்றும் நீஙகாதவனும் நம் எல்லோருக்கும் நல்லன எலலாவறறையும் அருளும் விநாயகனே நமது குறை தீர்ப்பான்.

இந்த விநாயக சதுர்த்தியை இந்தியாவில் குறிபபாக வடஇநதியாவில மிகச் சிறபபாக "காணபத்ய காரர்கள்" கொண்டாடிமகிழ்வர்.

குறிப்பாக விநாயகசதுர்ததி அனறு தமிழநாட்டில் உளள திருவலஞசுழி விநாயகருக்கும் (வெள்ளை விநாயகர்) திருப்புறமபியம் பிரளயம காத்த விநாயகருக்கும் தேனபிஷேகமும், ஸ்ரீ சுகந்தகுநதலாம்பிகா சமேத, நித்ய கல்யாணி சமேத ஸ்ரீ அட்சரபுரீஸவரர் கோயில் கொண்டுள்ள வடகரை இன்னமபர் எனற திரு இனனம்பரில் கமபத்து விநாயகருக்கு சீறும சிறபபுமாக இநத விநாயக சதுாததிககு மகோன்னத பூஜைகள நிகழ்வது நாம் பெற்ற பேறே ஆகும்.



## விண்ணப்பம்

தி. தி. தேவஸதான கோயில்களில் மறறும திருமலை ஸ்ரீ வேஙகடேஸ்வரா கோயிலில் நடைபெறும ஆர்ஜித சேவைகளுககாக அனுப்பப்படும கட்டணத தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறபபட்ட 'டிமாணட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள. 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத தெரிவித்துக் கொள்கினறோம்.

# ஓங்கி உலகளந்த உத்தமன்

சிவபெருமானின் பல்வேறு திருவுருவங்களில் திரிபுராந்த வடிவம் போன்று, பாற்கடலில் பள்ளி கொண்ட பரந்தாமனின் பத்து அவதாரங்களில் ஸ்ரீராமபிரான் மற்றும் கண்ணபிரான ஆகியோரின் வடிவங்களுக்கு அடுத்தபடி திரிவிக்ரம வடிவம் திரு அருட்செல்வர்களாலும் செந்நாப்புலவர்களாலும் பெரிதும் போறறப்பட்டுள்ளது. மேலும் திருமாலின் ஐந்தாவது அவதாரமான இது மனிதனின முழுவளர்சசி கொண்டமுதல் அவதாரம் என்பதும் குறிப்பிடததககது.

திரு. தி. இராசமாணிக்கம்,
பி ஏ,பி காம,
பொள்ளாச்சி

திருமாலின் அனபனுன பிரகலாதனின் பேரனுன "தொல்சீர், விறல் மாவலி" பிரமனிடம் பெருவரங்கள் பெறறு இந்திரப்பதவியைக் கவர்ந்து கொண்டான். மூவுலகில் அறநெறி பிறழாது, குடிகள் இறை அன்புடன வாழ நல்லாட்சி புரிநது வந்தான். இநதிரன் தன் பதவியை மீண்டும் பெற கடல்நிற வண்ணனும் திருமால் காசிப முனிவனுக்கு அதிதியிடம் உபேந்திரன் எனற பெயரில் தோன்றினுன். இதைக கம்பநாட்டாழ்வார் தமது இராமகாதையில்,

"நீல நிறத்து நெடுந்தகை வநது ஓர்
ஆல அமா வித்தின் அருங்
குறளாஞன்"
[1-8-20]

என்பர். அதாவது பெரிய ஆலமரம் முழுதும் அடங்கியுள்ள சிறிய ஆலம் விதை போன்று நீல நிறத்தையுடைய திருமால் மிக்க குறுகிய வடிவத்துடன் தோன்றினுன் என்பதாம்.

அமரர்களும் செய்தற்கரிய மாபெரும் வேள்வியை செய்து கொண்டிருந்த மாவலி தன் செல்வத்தை எல்லாம் அந்தணர்களுக்கு அளிக்க முடிவு செயது, அதன்படி வழங்கிக் கொண்டிருந்தான் அவன்பால் திருமாலாகிய வாமனன் மாணி (பிரம்மச்சாரி) வடிவில் சென்றதை

"முப்புரி நூலினன்; முஞ்சியன்;
விஞ்சை
கற்பது ஓர் நாவன; அனல்படுகையன்
அறபுதன்—அற்புதரே அறியும் தன்
சிறபதம் ஒபபது ஓர் மெய்க்கொடு
சென்ருன் ]1-8-21]

எனக கம்பநாட்டாழ்வார் தமது சொற்றிறத்தால் படிப்போர் கண் முன் சித்தரித்துக் காட்டுகிருர். அதாவது முப்புரி நூலினையும், முஞ்சிப்புல்லால் முறுக்கி உண்டாக்கப் பெற்ற அரைநாணையும் அணிந்து இருந்தான்; மறைகளை ஓதும் நாவினை உடையவன்; தீ பொருந்திய கைகளைக் கொண்டவன்; ஞானிகள் மட்டும் அறியத்தக்க ஞான வடிவினை உடையவன்; இத்தன்மையான திருமால் மாவலியின் வேள்விக்குச் சென்ருன் என்பதாம்.

வாமனன் மாவலியிடம் தன் காலகளால் மூவடி மண் வேண்ட, அவன் 'தந்தேன்' என்றனை. அது சமயம் அவனது குருவான சுக்ராசசாரியார் வநதிருப்பவன திருமால் எனச் சுட்டிக்காட்டி, அவன மூவடி நிலம் கொடுப்பதினின்றும் தடுக்க முயன்ருன். 'தன் பெருமைக்கு ஏற்ற வகையில் அல்லாது அஞ்சன வண்ணனும் திருமால் என் கைக்குக் கீழே தன கை தாழ இரப்பானுகில், அதை விடப் பேறு எனக்கு இல்லை' என்று கூறியதுடன் கொடையின் சிறப்பையும் எடுத்துக் கூறுகிருன். அவன் மூவடி மண்ணை நீர் வார்த்து வழங்க திருமால் கண்டவர்கள் வியப்பும் அச்சமும்அடைய விசுவரூபம் எடுத்து தன் திருவடிகளால் விண்ணையும் மண்ணையும் அளந்தான். இதைப் பொய்கையாழ்வாழ்வார்,

"பாா அளவும் ஓர் அடி வைத்து
ஓரடியும் பார் உடுத்த
நீரளவும் செல்ல நிமிர்ந்ததே"
[முதல் திரு. 3]

என்றும், சூடிக்கொடுத்தநாச்சியார்

"அம்பரம ஊடறுத்து ஓங்கி உலகளந்த
உம்பா கோமானே" [திருப்-17]

என்றும் போற்றியுள்ளனர். மூன்ருவது அடிக்கு இடம் இல்லாது போகவே, மாவலியின் விருப்பப்படி அவன் தலைமீது தன் சேவடியை வைத்தான். அதனுல் 'பெரியவனுய் மாற்ருது வீற்றிருந்த மாவலி" பாதளத்தில் அழுந்த, மூவுலகாட்சியை இந்திரன் மீண்டும் பெற்ருன்.

அரவணையானிடம் ஆராக் காதல் கொண்ட ஆழ்வார்கள் அண்ணலின் இப்பேராற்றல் மிக்க செயலில் திளைத்து தம்மை மறந்து தமது திருப் பாசுரங்களில் பலவாறுகப் போற்றிப் பாராட்டிப் புகழநதுள்ளனர். குலசேகரபெருமாள, தொண்டரடிப் பொடியாழ்வார் மறறும் திருப பாணுழ்வார் ஆகியோர் ஒவ்வோர் இடத்திலும், திருமழிசைப்பிரான் 9 இடங்களிலும், ஆண்டாளும் பொய்கையாழ்வாரும் 13 இடங்களிலும், பூதத்தாழ்வார் 14 இடங்களிலும், பெரியாழ்வார் 15 இடங்களிலும், பேயாழ்வார் 18 இடங்களிலும் மங்கைமன்னன் 65 இடங்களிலும், நம்மாழ்வார் 80 இடங்களிலும் இத

" களளக் குறளாய் மாவலியை

வஞ்சித்து

உலகம கைப்படுத்து " [5-1-2]

என மங்கைமன்னனும,

" மின கொள சேர் புரிநூல் குறளாய

அகன ஞாலம்கொண்ட

வனகள்வன " [6-1-11]

என நம்மாழ்வாரும் தமது திருப் பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளனர். மாவலியின் மகனுன நமுசி என்பான் திருமாலை நோக்கி " நீ உன் சிறிய வடிவில் என் தநதையை அணுகி உன் காலால் மூவடி மண் இரந்தாய், என் தநதை அதை அளித்தான. நீ விசுவரூபம் எடுத்து மூவுலகங்களையும அளந்த இநத வஞ்சத்தை என்தந்தை அறிந்திலன். நீ எந்த வடிவில் மண்ணை இரந்தாயோ. அதே சிறிய உருவில் மூவடி நிலம் அளந்துகொள்' என்ருன். அவனைத் திருமால் தன ஒரு கையால் பற்றி வானில் சுழற்றி ஞன். இநத நிகழ்சசியைப் பெரி யாழ்வார்,

" எனனிது மாயம எனனபபன

அறிந்திலன

முன்னைய வண்ணமே கொண்டு

அளவாய் எனன

மனனு நமுசியை வானில சுழற்றிய

மின்னு முடியனே " ]1-9-8]

என அருளியுள்ளார். ஆழ்வாாகள தமது திருவாக்குகளில் திருமால் மாவலியை வஞ்சித்ததை இககழ்வது போன்று புகழ்ந்து உள்ளது உய்த்து உணரத்தக்கது. மூவுலகஙகளையும் தன் தாமரைத் தாள்களால் அளந்த பின் அந்தக் களிப்பில் திருமால் நடனமாடிஞனும். இதை,

" குடமாடி இம்மண்ணும விண்ணும

குலுங்க உலகளந்து

நடமாடிய பெருமான " [திரு-38]

என்பர் நம்மாழ்வார்.

சங்ககால இலக்கியங்களிலும் ஏனையவற்றிலும் பெருமைமிகு பேராற்றல் மிக்க இநத வடிவினைப பற்றிய குறிப்புகள் காணப்படுகின் றன. எடுத்துக்காட்டாக 'முலலைப்



திரிவிக்ரமன் குடைவரைக்கோயில் - நாமக்கல்.

லைக் குறிப்பிட்டுள்ளனர். இதினின் றும் இச்செயலை நம்மாழ்வார் அதிக அளவில் போற்றியுள்ளாா என்பது தெரிய வருகிறது. திருமாலின் அளப்பற்ற ஆற்றலை ஆழ்வார்களில் தலைசிறந்த நம்மாழவார் பெரும் அள வில் பாராட்டியுள்ளது சாலப் பொருத்தமே.

திருமாலினது வாமன வடிவை "கோலக் குறளுருவாய்" என்றும், "பொல்லாக் குறளுருவாய்" என்றும் ஆண்டாளும், " பொங்கு இலங்கு புரிநூலும் தோலுந்தாழப் பொல் லாத குறளுருவாய் " என மங்கை மன்னனும் குறிப்பிட, நம்மாழ்வார் " பொல்லாதத் திருக்குறளர் " என அழகுபட அழைக்கிருர். இவ்வாறு ஆழ்வாாகள் குறளுருவை 'பொல் லாதது" எனறு குறிப்பிடக் கார ணம் அவன் தன் சிறிய காலால் மூவடி மண இரந்து விசுவரூபம் எடுத்து மூன்று உலகங்களையும் அளந் ததுதான. இவ்வாறு மாவலி விக சிக்கப்பட்டதை,

" இரக்க மண் கொடுத்தவற்கு இரக்கம்

ஒனறுமின்றியே

பரக்க வைத்து அளந்து கொண்ட

பற்பபாதன் [திரு. 32]

எனத் திருமிழிசைப்பிரானும்,

பாட்டு என்ற சங்ககால நூலில் நப் பூதனார்,

“நீர் செல நிமிர்நத மாஅல” [வரி 3] என்பர். அதாவது மாவலியால் மூவடி மண வழங்கியமைக்கு வார்த்துக்கொடுத்த நீர் தன் கையில் விழுந்தவுடன் விசுவரூபம் எடுத்த திருமால் என்பதாம். “பெரும்பாணாற்றுப் படை” என்ற சங்ககால நூலில் கடியலூரர் உருத்திரங்கண்ணனார்,

“இருநிலங் கடந்த திருமறு மார்பின்

முந்நீர் வண்ணன்” [வரி 29-30]

என இப்பெருநிகழ்ச்சியை எடுத்து உரைக்கின்றார். அதாவது பெரிய நிலத்தை அளந்த, திருமகளை மார்பில் கொண்டவனும் கடல் நிறக் கடவுளுமான திருமால் என்பதாகும். பரிபாடல் என்ற சங்ககால நூலில் கடுவன் இளவெயினனார் திருமாலின் திருவடியினை “கீழேழுலகமும் உற்ற அடி” எனக் குறிப்பிட்டுள்ளார். அதாவது திருமாலின் திருவடி கீழே உள்ள ஏழு உலகங்களையும் அளந்தது என்பதாம். ஐம்பெருங்காப்பியங்களில், இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்திலும், சாத்தனார் தமது மணிமேகலையிலும், “நீணிலம் அளந்தோன்” என இப்பெருஞ்செயலைக் குறிப்பிட்டுள்ளனர். மேலும் இளங்கோவடிகள் ‘ஆய்ச்சியர் குரவை’யில்,

“திரண்டு அமரர் தொழுதேத்தும்
திருமால் நின் செங்கமல
இரணடடியான மூவுலகும் இருள்தீர
நடந்தனையே’,

என்றும்,

“மூவுலகும் ஈரடியான முறை நிரமபா
வகை முடியத்
தாவிய சேவடி”

என்றும் விரிவாக எடுத்து உரைக்கிறார்.

ஆகமத்தினபடி, இந்த வடிவம் இரண்டு பிரிவுகளைக் கொண்டது. முதல் பகுதியில் வாமனன் மாவலிபால் மூவடி மண் இரப்பது; இரண்டாவது பகுதியில் திருமால் உலகளந்தானாக விசுவரூப வடிவில் அமைப்பது.

வாமனனை இரண்டுவிதமாக உருவாக்க ஆகமங்களில் விதிகள் கூறப்பட்டுள்ளன. இரண்டு கைகள் கொண்ட வாமனன் கைகளில் குடையும் கமண்டலத்தையும் வைத்திருப்பான். “சத்திரம் ஏந்தித்தனியொரு மாணியாய்” என்பர் பெரியாழ்வார். உச்சந்தலையில் குடுமியும் மார்பில் முப்புரி நூலும் காணப்பட, மான்தோலை ஆடையாக அணிந்து இருப்பான். அவனது மூன்றாவது விரலில் தர்ப்பையாலான மோதிரம் அமைக்கப்பட வேண்டும். இவையாவும் அவன் பிரமச்சாரி என்பதைச் சுட்டிக்காட்டும். அவன் கையில் உள்ள புத்தகங்கள் அவன் வேதங்களைக் கற்கும் மாணவன் என்பதைக் குறிப்பிடும். அவனது முகத்தில் அறிவுக்களை ஒளிர்விட்டுத் திகழ வேண்டும். இதற்கு மாறுபட்ட முறையில், கூன் விழுந்த முதுகும், பெருவயிறும் உடைய அழகற்றவனாகவும் உருவாக்கலாம்.

மூவுலகும் அளந்தாரின் திருவுரு இடது காலை நீட்டிய நிலையை அடிப்படையாகக் கொண்டு மூன்று வகைகளாக வகுக்கப்பட்டுள்ளது. அவை யாவன: 1) வலது முழங்காலுக்கு நேராக நீட்டி இருத்தல்; 2) முகத்தில் மூக்கிற்கு நேராக நீட்டி இருத்தல், 3) தலையில் நெற்றிக்கு நேராக நீட்டி இருந்தல் தல். வலது முழங்காலுக்கு நேராக இடது கால் நீட்டி இருந்தால், அது மண்ணுலகத்தை அளப்பதையும், மூக்குக்கு நேராக நீட்டி இருந்தால், அது மண்ணுக்கும் விண்ணுக்கும் இடைப்பட்ட உலகைக் கடப்பதையும் அதாவது விண்ணை அளப்பதற்காக மேல் நோக்கிச் செல்வதையும், நெற்றிக்கு நேராக நீட்டி இருந்தால், அது விண்ணுலகத்தை அளப்பதையும் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது. இந்த வடிவிற்கு 4 அல்லது 8 கைகளை அமைக்கலாம். 4 கைகள் கொண்ட வடிவில் வலக்கை ஒன்றில் சங்கும் இடக்கை ஒன்றில் சக்கரமும் காணப்பட, மற்றொரு வலக்கையை அபய அல்லது வரத முத்திரையில் அமைக்கலாம் அல்லது உள்ளங்கை மேலே நோக்கியபடி-மேலே நீட்டியபடி உருவாக்கலாம். மற்றொரு இடக்கை நீட்டிய காலை ஒட்டி நேராக நீட்டி இருக்கவேண்டும். 8 கைகள் கொண்ட வடிவில் 5 கைகளில் சங்கு, சக்கரம் கதை, சார்ங்கம் என்ற வில் மற்றும் கவப்பை ஆகியவை காணப்பட, ஏனைய மூன்று கைகளையும் 4 கைகள் கொண்ட வடிவில் உள்ளது போன்று உருவாக்க வேண்டும். வலது கால் நிலத்தில் ஊன்றி இருக்க, இடதுகால் மேலே தூக்கிய நிலையில் இருக்கவேண்டும். பல அணிகலன்களை அணிந்துள்ள அவனது தலைக்கு மேல் இந்திரன் குடையைப் பிடித்துக் கொண்டிருக்க வாயும் வருணனும் இருபுறமும் சாமரை வீசிக்கொண்டிருக்க வேண்டும். இடது புறமும் சந்திரனும், வலதுபுறம் சூரியனும் காணப்பட, சனகர், சனத்குமாரர் என்ற முனிபுங்கவர்கள் மூவடி கொண்டானுக்கு அருகில் அமைக்கப்படவேண்டும். திருமாலினது மேலே தூக்கிய நிலையில் உள்ள இடது காலை பிரமா தன் கையால் தூக்கியபடி தன் கமண்டலத்தில் உள்ள நீரால் கழுவ வேண்டும். சிவபெருமான் திருமாலின் முகத்திற்கு அருகிலும், மாவலியின் மகனான நமுசி காலுக்கு அருகில் வணங்கிய நிலையிலும் காட்டப்பட வேண்டும். மாவலி மூவடி மண் கொடுப்பதைத் தடுக்க முயற்சி செய்த குருவான சுக்கிராச்சாரியாரை திருமாலின வாகனமான கருடன் தன் கையில் பிடித்த நிலையில் இருக்க வேண்டும். வலது புறம் தன் கையில் குடையுடன் வாமனன் இருக்க, அவனுக்கு எதிரில் மாவலி தன் கையில் பொற்குடத்துடன் மூவடி நிலம் அளிக்கும் நிலையில் உருவாக்கப்பட வேண்டும். மாவலிக்குப்பின்னால் அவனது வாழ்க்கைத்

துணைவியும், அம்பரம் ஊடறுத்த அண்ணலின் தலைக்கு மேல் முரசு அறையும் நிலையில சாமபவனும காணப்படவேணடும. 'சில்ப ரத்தினம' என்ற நூலின்படி, மணவாளந தானின் இடது கால் ஊனறி இருக்க வலது கால் நீட்டியிருக்க வேண்டும். "விஷ்ணுதர்மோததிரம்" என்ற நூலின்படி, படைக்கலங்களைப படைக்கலங்களாகக் காட்டாது மானிட உருவத்தில் உருவாகக வேண்டும்.

முற்காலத்தில் இந்த வடிவிற்கு 8 கைகள அமைக்கப்பட்டன. நாளடைவில் 8 கைகளுக்குப் பதில் 4 கைகளை உருவாக்கும் மரபு ஏறபட்டது

சென்னையை அடுத்துள்ள வராக மணடபத்தில இந்த வடிவம புடைசிற்பமாகக காணப்படுகிறது. இநதத் திருவுருவின வலது கால் ஊனறி

(29-ம் பக்கம பார்க்க)

# துளசி மகிமை

தொண்டு செய்யும் செடிகளிலே
துளசிப் பணியே உயர்வாகும
கண்டு பயனும அறிந்திடவே
கவியின் உருவில் சாற்றிடுவம்

வீட்டின் முற்றம் சிறபபோங்க
வண்ணத் துளசி மாடமேற்போம
தோட்ட நுழைவின முன்னிடத்தைத்
துளசி மாடங் கொணடமைப்போம்.

"வேம்பும் துளசியும் வீணுகா"
வித்தகு பழமொழி சீர்கண்டோம்!
காம்பும் துளசியும் நாருடனே
கட்டிய மாலை பொலிவேற்கும

கன்னிப் பெண்கள் விரும்புகின்ற
கணவனைப் பெற்று மகிழ்வோங்க
மென்மைத் துளசிப் பயிர்வளர்தது
மேன்மைப் பூசனைத் தினமேற்பர்

கற்பிற சிறநத மகளிர்க்குக்
காக்குந தெயவம துளசியன்றோ!
அற்புதங் காட்டும பிருந்தைநல்லாள்
அன்றோ வியக்கத் துளசியானாள்.

உகந்த வெப்பம் உடலேற்க
உவநது உளமும குளிரேறகச்
சுகந்த துளசிக கட்டையினைத
தொடுத்து மார்பில் சரமேற்பர

உயிர்ககு ஆயுள் பெருகிடவே
உறற துணைவி துளசியாகும
வயிற்று உளைசசல் அத்திசுரம்
வற்ற மருநது துளசியாகும்.

சுறறிப் பறக்கும் ஈ, கொசுக்கள்
சூழ்ந்து நம்மைத் தாக்குதலால்
பற்றி உடலைத் துன்புறுததும
பிணியைத தீர்ப்பது துளசியன்றோ!

நஞ்சை நல்கும உயிரினஙகள்
நம்மை வந்து அணுகாது
அஞ்ச வைக்கும் துளசியினை
அழகுற வளர்ப்போம் இல்முன்னே!

மென்று துளசியைத தின்பவர்கள்
மணக்குங கார்ப்புச சுவையேறபர
அனபால் துளசித் தார்சூடி
ஆணடாள் ஏற்றாள் பரமனையே!

திருமகள் அமிசமாய்த் திகழ்கின்ற
தாவர மூலிகை துளசியன்றோ!
திருததுழாய், தாமரை இரண்டாலே
திருமால் திருவடி சிறபபேற்கும

துளசி கொண்ட இச்சையினால்
திருமால் ஏற்றார் பசசைநிறம்
துளசி என்ற சொல்லிற்கே
தூய்மை ஒளிரும் செடியாகும

கணணன் கீதைக் காட்சியிலே
கணடோம துளசி மாட்சியினை!
மணணில மகிமை காட்டுகின்ற
மகததுவச சக்தி துளசியாகும!

நீரில் துளசியைக கழுவாதீர்
நகத்தால் அதனைக கிளளாதீர்!
பாரில் மதித்துத் துதிப்போர்க்குப்
பரம லோக எளிதாகும்

கஞ்சாங் கோரை இனத்தினையே
கொணடது துளசி முனனாளும்!
விநதைத துளசி வரததாலே
வளமை வாழ்வு இனிதேற்போம்!

கவிஞர் அ. காசி எம்.ஏ., பி.டி.,-அருப்புக்கோட்டை.

# கோள்களும் கோவிந்தனும்



எம்பெருமான் கோவிந்தனைத் தொழ கோள்களால் தோன்றும் வல் வினைகள் அனைத்தும் மறையும். ஒன்பது கோள்களாகிய சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, நிழற்கோள்களாகிய ராகு, கேது ஆகிய இவர்கள் நம் முப்பிறவியின் நல்வினை, தீவினைகளுக்கேற்ப நம் மதியை நடத்திப் பலனை அடையச் செய்கின்றனர். இவ்விதம் நம்மைப் பிடிப்பதாலேயே கிரஹங்கள் எனும் பெயர் பெறறனர். 'க்ருண்ணுதி இதி க்ரஹ:' என்பர்.

கோள்களனைத்தும் கோவிநதனின் அடியாாகளின்அடியார்கள்வரிசையில் கடைசி வரிசையைச் சார்நதவர்கள் என்பதனுல் வேங்கடவனைத் தன் இதயத் தடாகத்துளே கொள்வோர்க்கு எவ்வித அச்சமுமில்லையென்பதை

சூர்யேந்து பௌமபுதவாக்பதி
காவ்ய சௌரி
ஸ்வர்பானுகேது திவிஷத் பரிஷத்
ப்ரதானு ||

த்வத்தாஸதாஸ சரமாவதி தாஸ
தாஸா
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ
சுப்ரபாதம் ||

எனும் ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாத சுலோகம் தெளிவுபடுத்துகின்றது. தோசார்யனும் நல்லோரைக்காக்க, தீயோரை அழிக்கவும் தானே தன் விருப்பத்தால் அவதரிப்பதை,

பரித்ராணய ஸாதூநாம் விநாஸாயச
துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே ||

என்றே அருளிச் செய்தார். எனவே எம்பெருமானின் அவதாரங்களை ஏத்துவதாலேயே எவ்விதத் தீயபலனும் நம்மை அணுகாது. ஆயினும் எந்தக் கோளுடைய ஆட்சி நடைபெறுகிறதோ அக்கோளுக்குரிய அவதாரத்தை தொழுவதும் சாலச் சிறந்ததே.

ரவிகுலதிலகன் ராமன். சந்திரகுல மதலை கண்ணன். எனவே ராமனைத் தொழுவதாலேயே சூரியனும், கண்ணனைக் கசிந்துருகி வணங்குவதாலே சந்திரனும் மகிழ்ந்து நமக்கு நற்பலன்களை வாரி வழங்குவர். அவ்வண்ணமே பூமியின் ஸம்பந்தம் பெற்ற தூணின்கண் தோன்றிய நரசிம்மனைத் தொழுவதால் பூமிகாரகன் எனும் பூமி புதல்வன் செவ்வாயும், சந்திரகுலத்தில் ரோகிணியின் மைநதனும் பலராமனைப் பணியச் சநதிரமைந்தன் புதனும், தேவர் கோன் பதவி பறிபோகாதிருக்க அந்தண உருவெடுத்துலகளந்த வாமனனை வணங்க தேவேந்திரன் பதவி நிலைக்க உறுதுணை புரியும் தேவகுருவும், தன்குலமாகிய பார்க்கவ குலத் துதித்த பரசுராமனைப் பணிவதாலே அசுரகுருசுக்கிரனும்,அமுதமெடுக்கப் பாற்கடலில் மலைசுமந்த மாயவனின் கூர்மாவதாரததை, மிகக்குறை கத்தையுடைய ஆமையின் உருக்ந்த, கொண்ட எம்பெருமானை ஏத்துவ தால் மந்தன் எனும் சனிபகவானும் எது ஈனம் எனக் கூறப்பட்டு எம்பெருமான் அவதரித்ததால் மேன்மை பெற்றனவோ, அக்கோல வராஹனைக் கொண்டாட, ஈன அசுரப் பிறப்பெடுத்தும், தேவ அமிழ்தம் சுவைத்து, சூர்ய சந்திரர்களை பிடிக்கும் பெருமைபெற்ற ராகுவும், வேதாந்த அறிவை வழங்கும் வேதங்களைக் காத்த, மத்ஸ்யாவதார வேத நாயகனை வேண்டுவதால் வேதாந்த அறிவு, மோக்ஷம் இவைகளைத் தர வல்ல கேதுவும் மகிழ்ந்து நம் இடர்களைக் களைந்து ஈடில்லாச் செல்வங்களை நல்குவர் என்பதை,


டாக்டர் எல். வீரராகவன்
மதுரை


ராமாவதார : சூர்யஸ்ய சந்த்ரஸ்ய
யதுநாயக :
ந்ருஸிம்ஹோ பூமிபுத்ரஸ்ச
ஸௌம்ய: ஸோமஸுதஸ்யச |
வாமநோ விபுதேந்த்ரஸ்ய பார்கவோ
பார்கவஸ்ய ச ||
கூர்மோ பாஸ்கரபுத்ரஸ்ய
ஸைம்ஹிகேயஸ்து சூகர :
கேதுர்மீநாவதாரஸ்ய யேகேசாந்யே
கேசரா : ||

எனும் சுலோகம் காட்டித் தருகின்றது. எனவே கோவிந்தனையும் அவன் கொண்ட அவதாரங்களையும் போற்றி வணங்கிக் கோள்களின் நற்பலன்களை அடைவோமாக.



# சிற்பத்திலும் இலக்கியத்திலும் மயில்



ராமாயணத்தில் மயில் பற்றிக் கூறப்பட்டுள்ளது. சீதையும் ராமனும் வனவாசம் செய்யும்பொழுது மயிலின் நடனமும், கூவலும் அவர்களைப் பரவச மூட்டியுள்ளன. சீதையைப் பிரிந்த பிறகும் ராமன் இதை உணர்கிறான்

காளிதாசன மயில்களை வளர்த்த தாகக் கூறுகிறான். வீட்டுக் கூரை களின்மீது அவை ஓய்வெடுக்குமாம். கைத்தட்டலுக்கு ஏற்றபடி மயில் ஆடுமாம். மயில்கள் இடையர்கள் வீடு களில் அதிகமாக வளர்க்கப்பட்டன வாம். இடையர் குலப் பெண்கள் மத் திட்டுத் தயிர் கடைந்து வெண்ணை எடுக்கும்போது அந்த சத்தத்தை கேட்டு மயில்கள் ஆடுமாம். மான் களே மயிலைக்கண்டு மயங்குமாம்.

திரு. என். இராமகிருஷ்ணு
மயிலாடுதுறை.

பாரதம் பறவைகளுக்கும் நதிகளுக்கும் புஷ்பங்களுக்கும் இயற்கைக் காட்சிகளுக்கும் பெயர் பெற்றது. இவை பல எழுத்தாளர்களையும் ஓவியர்களையும் கவிஞர்களையும் பரவச மாக்கியுள்ளன. மக்களின் அன்றாட வாழ்க்கைக்கும் இவை இன்றியமை யாதனவாக இருக்கின்றன.

பாரதக் கவிஞன் இவற்றின் நடுவில் வாழ்ந்துள்ளான். இவற்றை மனதில் கொண்டு பல கவிதைகள் எழுதியுள்ளான்.

பறவை உலகில் மிகவும் அழகான தும் மனதைக் கவருவதுமாக உள்ளது மயில். இது நம் நாட்டின் தேசியப் பறவை. மக்களின் ஏக மன தான தேர்வு இது. இதனுடைய லாவகமான நடையும் அழகும் வர்ண மும் இயற்கை வர்ணத்தை ஒத்துள்ளது. சுற்றுச்சூழ் நிலைக்கும் ஏற்ற தாக அமைந்துள்ளது. மற்ற எல்லா பறவைகளையும்விட ஒரு கவிஞனின் மனதை கவர்ந்துள்ள பறவை இது என்பது அவர்களின் கவிதைகளி லிருந்து தெரிகின்றது.

காளிதாசன் என்ற கவிஞர் மயி லின் அழகை அற்புதமாக வர்ணித் துள்ளான். இப்பறவைக்கு தன் கவிதைகள்மூலம் சிரஞ்சீவித்வம் கொடுத்துள்ளான். பாரதத்தின் 6 ரிதோஷ்ண பருவ காலங்களுக்கும் ஒப்பிட்டுள்ளான். அதன் நடனத்தை யும், பறந்து விரியும் தோகையையும் வர்ணித்துள்ளான். மழைக் காலங் களில்தான் மயில் மிகவும் குதூகல மாக இருக்கும். கருமேகத்தை கண் டதும் தோகை விரித்து ஆடும். அதன் தோகையில் உள்ள கண்களை புஷ்ப மெனக் கருதி வண்டுகள் ரீங்காரம் செய்யுமாம்.

மயிலைப் பார்த்த மான்கள் புல்கூட உண்ண மறந்து விடுமாம். ஒரு சமயம் ராமர் ஒரு மயில் கடம்ப மரத்தின் மீது ஆடும்போது, சீதையின் பிரிவை நினைத்து மிகவும் துக்கப்பட்டானும். அவர்கள் சேர்ந்திருந்தபோது, சீதை கைத்தாளம் போட மயில் ஆடிற்றும். மயிலின் கண்களை சீதையின் கண் மணிக்கு ஒப்பிட்டு, அவள் பிரிவிற் காக ஏங்குகிறான் ராமன் என்று கவி கூறுகின்றான்.

காளிதாசன் எழுதிய அமர காவியம் மேகதூதம். அதனமூலம் செய்தி அனுப்புகிறான். இமய மலையை அடையும்போது இம்முகில் களைக் கண்டு, கந்தனின் மயில் வாக னம் நடனமாடியதாம். அதன் கண் கள் சிவபெருமானின பிறைச்சந் திரனைவிட ஒளி பொருந்தியதாக இருந்ததாம். அதன்தோகையிலிருந்து



மயில் உருவத்தில் பால சரஸ்வதி என்ற சரோட் வாத்தியம்.

வீழ்ந்த சிறகை பார்வதி தலையில் அணிந்தாளாம். காளிதாசன் மயிலையே காதலித்தது போல் எழுதுகிறான்.

புராணங்களில் மயில் கார்த்திகேயனின் வாகனமாகவும், இந்திரனின் மனதுக்குவந்த பறவையாகவும் கூறப்பட்டுள்ளது. ஒரு சமயம் ராவணனுக்கு பயந்து இந்திராதி தேவர்கள் பறவைகளின் உடலுக்குள் ஒளிந்துகொண்டார்களாம். இந்திரன் மயில் உருவம் கொண்டு ஆடினனும், கண் கொடுத்தானும். பாம்புக்கு மயில் பயப்பட தேவையில்லை என்பது ஒரு வரம். அதன் தோகையில் ஆயிரம் கண்கள் உருவாகும் என்பது மற்றென்று. இந்திரன் மழைக்கு அதிபதி. அதனுல்தான மழை மேகம் காணப்படும் பொழுது மயில் மகிழ்ச்சியுடன் ஆடுகின்றது.

மயில் முருகனுடைய வாகனம். ஜெய்னர்கள் படைத்தலைவன் மயிலைப் போற்றி வந்தான். கலைமகளின் வாகனம் மயில். பௌத்த கடவுளான மஹா மயூரிக்கு வாகனம் மயில். ஜெய்னதீர்தங்கர்கள்மயிலைப்போற்றி வந்துள்ளார்கள்.

கிரேக்க கடவுளான ஜுனே மயிலை வாகனமாகக் கொண்டார். அலக்ஸாண்டர் காலத்தில் மயில் கிரேக்க நாட்டுக்கு இந்தியாவிலிருந்து எடுத்துச் செல்லப்பட்டது என்று சரித்திரம் கூறும்.

கி. மு. 600ல் இந்திய நாணயங்களில் மயில் உருவம் பொறிக்கப்பட்டதற்கு சான்றுகள் உள. அசோகர் காலத்தில் மயில் சின்னம் இருந்தது. 'மயூரா' என்ற வார்த்தையை 'மோரா' என்றுகூறி வந்தனர். மயிலைக்கொல்லக் கூடாது என்ற சட்டமும் அக்காலத்தில் இருந்தது. கி.மு. இரண்டாம் நூற்றுண்டில் கட்டப்பட்ட சாஞ்சி சிற்பங்களில் மயில் உருவம் வெகுவாகக் காணப்படுகின்றது. கிழக்கு வாயில் கதவுகளில் றன. அதன் நீண்ட தோகை அழகாகக் காணப்படுகின்றது. கிழக்கு வாயில் கதவுகளில் சிற்பக்கலை அழகாக அமைந்துள்ளது. காஞ்சியில் உள்ள இரண்டாவது ஸ்தூபியில், மயில் தோகை விரித்த நிலையில் காணப்படுகின்றது. கி. மு. இரண்டாம் நூற்றுண்டில் 'சுங்கா' அரசர்கள்காலத்தில் மயில் சின்னம் இருந்ததாம். இப்போது இவை குவாலியர் கண்காட்சி சாலையில் உள்ளன. மானும் மயிலும் பல சிற்பங்களில் சேர்ந்து காணப்படுகின்றன. இரண்டாம் நூற்றுண்டின் சில சிற்பங்களில் ஸ்ரீதேவி என்ற தேவதை மயிலை வாகனமாகப் கொண்ட காட்சி காணப்படுகின்றது. கி. பி. நான்காம் நூற்றுண்டு 'யாயூதியா' காலத்து நாணயங்களில் ஸ்கந்தன் மற்றும் மயில் உருவங்கள் காணப்படுகின்றன. குப்தர்கள் காலத்தில் மயிலைப் போற்றி வந்துள்ளார்கள். குமார குப்தன் என்பவன், தான் மயிலுக்கு தீனி போடுவது போல் ஒரு தங்க நாணயத்தை அச்சிட்டான். மறுபக்கம் மயில்மீது கார்த்திகேயன் காட்சிஅளிக்கின்றுன். 7-ம் நூற்றுண்டில் வெளியிடப்பட்ட நாணயங்களில் மயில் உருவம் காணப்படுகின்றது. இது ஹர்ஷவர்த்தனர் காலம். தோரமான் என்ற ஹூன அரசன் மயில் சின்னம் பொறித்த நாணயங்களை வெளியிட்டான்.

சிற்பங்களிலும் ஓவியங்களிலும் மயில் உருவம் பிற்காலத்தில் வெகுவாகக்காணப்பட்டன.படிமங்களிலும் அவை உருவாக்கப்பட்டன. 10-ம் நூற்றுண்டிலிருந்து சோழ அரசர்கள் மயிலை முருகனின் வாகனமாகத்தான் சித்தரித்தார்கள். விஜயநகர அரசர்கள் காலத்தில் முருகன் மயில்மீது ஏறி உலா வருவதுபோல் அமைத்தார்கள். இது 14-ம் நூற்றுண்டு வரலாறு.

சிற்பங்கள் மட்டுமல்லாமல் ஓவியங்களிலும் மயில் வரையப்பட்டது. சில ராகங்கள் கூட கர்னுடக சங்கீத்



மயூரருத்ர வீணை



மயில் வாகனம்

தில் மயிலுக்கு ஒப்பிடப்பட்டன. மேகராகம் என்பது ஒன்று. மழை நீரை வானத்திலிருந்து பொழியும் போது மயில் நேராகவே பருகுமாம்! ராஜஸ்த்தான் ஓவியங்களில் மயில் வெகுவாக காணப்படுகின்றது. இது 18-ம் நூற்றாண்டில், 17-ம் நூற்றாண்டில் மேவார் நாட்டு மயில் காணப்படுகின்றது. இவற்றை மேவார் 'ரத்தின மாளிகை'யில்காணலாம். தேசிய தொல்பொருட்காட்சிசாலைகளிலும் காணலாம்.

மயில் உருவம் எல்லாவிதமான உலோகங்களிலும், வண்ணக்கற்களிலும் செதுக்கப்படுகின்றன. தந்தம், கண்ணாடி முதலியவற்றில்கூட அழகான மயில் உருவங்கள் செய்கின்றார்கள். கேரளத்தில் மயில் போல் ஓடம் செய்கின்றார்கள்.

வங்காளத்தில் மயில் குறித்துப்பல கதைகள் கூறப்படுகின்றன. இவற்றிற்கு "மயூரபங்கி" என்ற பெயர் வழங்கி வருகின்றது.

கத்தியவார், சௌராஷ்ட்டிரா முதலிய இடங்களில் பெண்கள் தங்கள் பாவாடைகளிலும் ரவிக்கைகளிலும் மயில் உருவத்தை ஜரிகையால் தைத்துக்கொள்வார்கள். வங்காளத்திலும் இவை பிரசித்தமானவை.

தமிழ்நாட்டில்கோவில்களில் மயில் சிறபம் அநேகம் உள்ளன. கோவில்களில் உள்ள தீபங்களில் மயில் உருவம் காணப்படுகின்றது. (மயூரதீபம்) மயில் உருவத்தில் வெற்றிலைப் பெட்டகம் கூட செய்கின்றார்கள். கிருஷ்ணன் கொண்டையில் மயில் தோகைகள் காணப்படுகின்றது. மயில் உருவம் கொண்ட சங்கீத வாத்தியங்களும் உண்டு.

மயிலாடுதுறை புராண வரலாற்றில் அம்பிகை இறைவனை மயில் உருவத்தில் பூஜித்ததாகக் கூறப்படுகின்றது. துலா உற்சவத்தின்போது மயிலம்மன் பூஜை நடைபெறும். கோவிலில் ஒரு சிற்பம் உள்ளது.

விராலிமலை மயில்களுக்குப் பெயர் பெற்றது. மயிலில வெள்ளை மயில் என்ற இனம் உண்டு. இது மிகவும் அபூர்வமானது!

அலெக்ஸாண்டர் 2000 ஆண்டுகளுக்கு முன் 200 மயில்களை கிரேக்க நாட்டுக்கு எடுத்துச் சென்றானாம். கிரேக்க நாட்டிலிருந்து இப்பறவை பல ஐரோப்பிய நாடுகளுக்குப் பர

றது. ஆபபாககா அமெரிக்காவிலும் மயில்கள் உள்ளன.

மயிலுக்குக் கண் பார்வை கூர்மையானது. காட்டில் புலி, சிறுத்தை முதலியவற்றைத் தூரத்தில் பார்த்ததும் மற்ற மிருகங்களுக்காக அபாயக் குரல் எழுப்பும். இந்திய கலாசாரத்தில் மயில் முக்கியமான அங்கம் வகிக்கின்றது. யஜுர் வேதம் மயில பற்றிச் சிறப்பாகக் கூறியுள்ளது. நம் நாட்டில் நாட்டிய வகைகளில் மயில் நாட்டியம் இடம் பெறுகின்றது.

முன் காலத்தில் மயிலின் தோகைக்கு "மார்சல்" எனப்பெயர். இது அரசர்களின் சின்னமாக இருந்தது. அரசவையிலும், ஊர்வலங்களிலும் மயில் தோகையால் ஆன விசிறி பயன்படுத்தப்பட்டன. வடநாட்டில் இப்போது கூட மயில் இறகு விசிறிகளை வாங்கலாம்.

முகலாய மன்னர்கள் காலத்தில் மயிலுக்கு மிக்க மதிப்பு இருந்தது. ஷாஜஹானின் உலகப் பிரசித்தி பெற்ற "மயில் சிம்மாசனத்தை" சரித்திரம் அற்புதமாக வர்ணிக்கின்றது.

ஜப்பானியர்களுக்கு இந்த அழகான பறவைமீது ஆசை அதிகம். ஜப்பானிலுள்ள "குருமே" என்ற நகரில் உள்ள மிருக பறவை காட்சிச் சாலையில் 600 மயில்கள் உள்ளனவாம் இவைகளுக்கென்று தன் இடம் ஒதுககப்பட்டுள்ளது அதற்கு "சன்போமாட்சு ஜீவலாஜிகல் கார்டன்ஸ" என்று பெயர். 1957ல் ஒரு ஜோடி மயில்கள் ஜப்பானுக்கு அனுப்பப்பட்டன. இநத ஜோடி 18 குஞ்சுகளை உண்டாக்கின. 1958 முடிவதற்குள இவை 40 ஆயின. பின்பு ஒரு ஆண்டில் 250 ஆயின 1959 முடிவில். இதிலிருந்து ஜப்பானியர் மயிலை எப்படி வளர்த்தார்கள் என அறிகிறோம்.

卐

# விநாயகர் வழிபாடும் வரலாறும்

தெய்வங்களுள் முதலானவர், மூலப்பொருளானவர் என்று போற்றப்படும் விநாயகரை ஒரு சமரசக் கடவுள் எனலாம். ஏனெனில் பல சமயங்களைச் சார்ந்தவர்களும் யானை முகக் கடவுளை வணங்குகின்றனர்.

வைணவம் இவரைத் தும்பிக்கையாழ்வாராக ஏற்றுக் கொண்டிருக்கிறது. கடல் கடந்தும் சீனு, ஜப்பான், சயாம், இந்தோனேஷியா ஆகிய இடங்களில் பல நூறு ஆண்டுகளாக விநாயகர் வழிபாடு சிறப்புற்று விளங்கியதை வரலாறு கூறுகிறது.

விநாயகர் வழிபாட்டின் துவக்கம் அது வளர்ந்து, பரவிப் பரிமளித்தது பற்றி சரித்திரபூர்வமாகப் பல தகவல்கள் உள்ளன. பல புராண, ஆகம நூல்களும், "க்ரஹ்ய சூத்ர" நூல்களும் விநாயகரை அம்பிகா(பார்வதி) புதல்வராகக் காண்கின்றன. சிவபெருமானும் யானைமுகக் கடவுளும் ஒருவரே என்னும் ஓர் உன்னத கொள்கை உண்டு.



ஸ்ரீ கணேசர்

சிவபெருமான் ராமாயணத்தில் "கணேச லோகஸம்கா" என்றும், மகாபாரதத்தில் "கணேசர்" என்றும் குறிப்பிடப் பெறுவது இங்கு நினைவு கூறத்தக்கது. கந்தவேளின் மூத்தோனை கண்ணனின் அம்சமாக வழிபடுவோரும் உண்டு. துதிக்கையையும் சேர்ந்து ஐந்து திருக்கரங்கள் கொண்டுள்ளதாலேயே விநாயகர் "ஐங்கரன்" எனப்படுகிறார். இவ்விதம் பலவாறாக இருப்பினும் தகவல்கள் அனைத்துமே வேழமுகனின் பெருமையையே பேசுகின்றன.

விநாயகரை இந்திய மக்கள் பன்னெடுங்காலமாகப் போற்றி வழிபடுகின்றனர். இதற்குச் சான்றாக இலக்கிய நூல்கள், கல்வெட்டுக்கள், புராணங்கள் ஆகியவை உள்ளன. உதாரணமாக வேதங்களுள் மிகப் பழமையானதான ரிக்வேதத்தில் கணபதியைக் குறித்து "கணாணாம் த்வா கணபதி" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதுபோன்று புராதன நூல்கள் பலவற்றிலும் விநாயகர் வழிபாட்டின் பழமைச் சிறப்பு பளிச்சிடுகிறது.

ஹிந்துக் கடவுள்கள்பற்றிக் கூறும் கல்வெட்டுச சாஸனங்களுள் மிகத் தொன்மையானது என்று கருதப்படும் குப்தர் காலத்துச் சாஸனங்களில் விநாயகர் பற்றியோ விநாயகர் வழிபாடு பற்றியோ எதுவும் காணப்படாதது ஏன்? என்று ஓர் வினாவை பண்டார்க்கார் போன்ற தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் எழுப்புகின்றனர்.

சண்மிஷ்டை
தஞ்சாவூர்.



குப்தர் கல்வெட்டுக்கள் விநாயகர் வழிபாடுபற்றி மௌனம் சாதிக்கின்றன என்றபோதிலும், விநாயகர் வழிபாடு புராதனமானதே என்ற கொள்கைக்குப் புறம்பானதாக அவற்றைக் கொள்ள முடியாது. "பிருஹத் சம்ஹிதை" எனனும் பழமையான நூல் விநாயகரைபபற்றி விரிவாகக் குறிப்பிடுகினறது. விநாயகர் வழிபாடு புராதனமானதே என்பதற்கு இந்நூல் சிறந்த ஆதாரமாக விளங்குகிறது.

இநநூலில் விநாயகர்பற்றிக் குறிப்பிடும் "பிரதிம லக்ஷண"ப் பகுதி ஒரு பிற்காலச் சேர்க்கை என்று சிலர் கருதுவர். இது முற்றிலும் வீண் கற்பனையேயாகும். அறிஞர் பண்டார்க்கா உட்பட பல தொல்பொருளியல் நிபுணர்கள் விநாயகர் வழிபாடு புராதனமானதே என்பதைப் பொதுவாக ஒப்புக் கொண்டிருக்கின்றனர்.

## தமிழகததில்

தமிழகத்தைப் பொறுத்தவரை இங்கும் சங்க காலத்திலேயே விநாயகர் வழிபடப்பெற்று வந்திருக்கிறார் என்பதற்குப் பல புராணச் சான்றுகள் உள்ளன. ஆனால், ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட வகையில் வரலாற்றுச்சான்றுகள் எதுவும் கிடைக்காதது வியப்பிற்குரியது. இவ்விஷயத்தில் இன்னும்தீவிர ஆராய்சசி தேவை என்பதையேஇது வலியுறுத்துகிறது.

பற்றிய குறிப்புகள் பலவிடங்களில் உள்ளன.

"நாரணன் ஒது நான்முகன் இந்திரன் வாரணன் குமரன் வணங்கும் காலா பூராண..." என்பது அப்பர் அருட்பா.

ஆனால், திருஞானசம்பந்தப் பெருமானே,

"கரியின் மாமுக முகைய
கணபதி தாதை பல் பூதம்
திரிய இல் பலிக்கேகுன் செழிற்
சுடர் சேர்தரு மூதூர்"

என்று கணபதியைக் குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார்.

அப்பர் கணபதியைச் சிவனை வழிபடுபவராகக் காண்கிறார். ஆறுமுகன், யானைமுகன் இருவரும் சிவபெருமானின் மைந்தர்கள் என்பதைத் தெளிவாகச் சொல்கிறார். அவர் தும்பிக்கையானின் துயர் துடைக்கும் அருட்பண்பை "விக்கின விநாயகர்" என்று கூறிப் போற்றுகிறார்.

விநாயகர் தத்துவக் கடவுளாக எல்லோருக்கும் மேலான நாயகராகத் திகழ்கின்றார். இவ்வுண்மையை சிவஞான சுவாமிகள் "ஏர்கொண்ட தன்னைத் தளைப்பவரும் ஊருறரும் இலாரென்பதுலகு தேறற்கு—எடுத்த வெம் பாசமோடங்கு சந்தன் கரத்தேந்தி மததாரை சிதறிப் பார் கொண்ட எண் திசைத் தறுகட்களிற்றுடல் பணிப்பச் செவிக்காலெழிஇ— பகிரணட முறறும் புகுந்து வாய்க்கலைசையிற் பதியுமோர் களிறு" என்று சித்தரிக்கினறனர்.

இப்பாடலில் விநாயகர் கையில் காணும் பாசம், அங்குசம் இவற்றைப்பற்றிப் புரிந்துகொள்ள முடிகிறது. இவை யானைப்பாகன் கையில் இருப்பவை. இங்கு இவை விநாயகரிடமுள்ளதால், இவரே யானைப்பாகராகிறார். இவர் நடத்தும் யானைகள மனிதப் பிராணிகளே! இதனை



நகச் சித்திரம்

"......எப்பாகர்க்கு மாங்கலவாகி
யியங்கும் உயிர்க்கரிகள்
தம்மை விடாது தொடர்ந்து
பிணிப்புத் தரும் அங்குச பாசம்
தாங்குதல் கண்டும்......"

சிவஞான சுவாமிகள் கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழில் வெகு அழகாகச் சொலலுகின்ருர். யானையைப் பாகன் மேடுபள்ளம் தவிர்த்துச் சமபூமியில் நடத்துவது போல, விநாயகப்பெருமான் உயிர்க் கரிகளை மேடாகிய விருப்பம், பள்ளமாகிய வெறுப்பு இவற்றைத் தவிர்த்துச் சம பூமியான நடுநிலையில் அழைத்துச் செல்கிருர்.

"ஓம்" என்ற பிரணவம் தமிகத்தில் பிள்ளையார் சுழியாக மாறி, சாஸனங்களிலும இடம் பெற்றது. பதிேைனாராந்திருமுறையில் மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவையுள் ("அ" பாடலில்) அதி நாவடிகள், மொழியின் மறை முதலே ..எங்கள் கணபதியே!" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. பிரணவத்திற்கு வரிவடிவமுண்டு. ஒலி வடிவமுண்டு. வரிவடிவம் விநாயகர் உருவத்திலும் அவருடைய ஆற்றலிலும் திகழ்கின்றது.

விநாயகருக்குப் பதினுறு வகை மூர்த்தங்கள் உண்டு. அவருக்கு சித்தி, புத்தி வல்லபை என்று மூன்று சக்திகள் உளர்.

யானைக்குக் கன்னத்தில் மத ஜலம் கசிவது போல, இவர் கன்னத்திலும் மதம் பொழிகிறது. என்ன மதம்? வலப்பக்கம் அறக்கருணே, இடப்பக்கம் மறக்கருணையாகிய மதங்கள்.

பிள்ளையாருக்கு ஐந்து கரங்கள் உண்டு. துதிக்கையில் குடம் கொண்டு "உமா சங்கரனை"ப் பூஜிக்கிருர். தமக்காக இரண்டு கரங்களில் பாசாங்குசங்களைத் தரித்துள்ளார். ஒடிந்த கொம்பு கொண்டு கயமுகாசுரனைக் கொன்று தேவர்களை ரட்சிக்கின்ருர். இடக்கையில் மோதகம் வைத்துள்ளார். தாய் தந்தைக்காக ஒன்று, பக்தர்களுக்காக இரண்டு. அரக்கனை வீழ்த்த ஒன்று. தமக்கென ஒன்றே ஒன்று தாங்கித் திகழும் இவரல்லவோ சமதர்மக் கடவுள்.

## சிற்பத்தில் கணபதி

சிற்பக் கலேஞருக்கு விநாயக பெருமானின் விசித்திர வடிவம் ஒரு வரப்பிரசாதமாகவே அமைந்திருக்கிறது. எழில் கொஞ்சும் தமிழ் நாட்டு ஆலயங்கள் பலவற்றில் விநாயகரின் அற்புதச் சிற்பங்களைக் காணலாம்.

சிவபுராணம், லிங்க புராணம, சுப்ரபேதாகமம், ஸ்வேதகல்பம் போன்ற பல, விநாயகரின் எழில் கோலஙகள் பலவற்றை வருணிக்கின்றன.

விநாயகரின் தோற்றம்பற்றி ஆராய்கையில் நந்திவர்மனின் "காசக்குடி" (Kasakudi) செப்பேடு தரும் சில செய்திகள் முக்கியமானவை; சுவையானவை. அச்செப்பேடு, ஔவைப் பிராட்டியாருக்குத் தமிழ் தந்த அரசடி அரசனின் அற்புத வடிவை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது.



நர்த்தன விநாயகர்

அது கைலமலையைப் போன்று தூய்மையான வெண்மேனி; யானை முகம்: நீண்ட செவிகள்; மார்பிலே கம்பீரமான நாகாபரணம்: பாதிவிழிகள் மட்டுமே திறந்த மோன அழகு; நீண்டு கவர்ச்சியாகக் காணும் துதிக்கை. இப்படிப் பலவாருகக் கணநாதனின் வடிவைச் சித்தரிக்கிறது நந்திவர்ம பல்லவனின் அழகிய செப்பேடு.

தஞ்சையை ஆண்ட சோழ வேந்தர் ராஜராஜனின் கல்வெட்டொன்றும் கணநாதனின் வடிவ வகைகளைப்பற்றிக் கூறுகின்றது. அக்கல்வெட்டு ராஜராஜன் ஏழு விநாயகர் வடிவங்களைச் செய்ததாகவும் அவற்றில் இரண்டு சிற்பங்கள் நடன முத்திரையிலும், மூன்று சிலைகள் அமர்ந்த கோ

# லக்ஷ்மி

லக்ஷ்மி யாரிடமெல்லாம் இருப்பாள் தெரியுமா?
பாக்கியம் செய்தவர்கள்;
பயமற்றவர்கள்;
வினைத்திட்பம் உள்ளவர்கள்;
தங்கள் கர்மத்தில் ஈடுபட்டவர்கள்;
கோபமற்றவர்கள்;
தேவாராதனையில் பற்றுள்ளவர்கள்;
நன்றியுள்ளவர்கள்;
புலன்களை அடக்கியவர்கள்;
சத்துவ குணம் நிறைந்தவர்கள்,
இவர்களிடம்தான் என்றும் இருப்பாள் லக்ஷ்மி.

# அழிவு

கிழத்தனம் அழகை அழிக்கிறது;
ஆசை தைரியத்தை அழிக்கிறது;
மரணம் உயிரை அழிக்கிறது.
பொறுமை தர்ம ஒழுக்கத்தை அழிக்கிறது;
கோபம் ஐஸ்வர்யத்தை அழிக்கிறது;
காமம் வெட்கத்தை அழிக்கிறது;
கர்வம் எல்லாவற்றையும் அழிக்கிறது.

தொகுத்தவர்: திருமதி. கமலா மாரியப்பன்-கோவை.

# கரிசல் நிலத்தில் கண்ணன் கீதம்

கேரிக்காட்டில் பனைஓலை மாதவன்பேர் சொல்லுது
ஏரிமேட்டில் வெள்ளைமண்ணு இவன்மனசை காட்டுது
ஊரிலுள்ள எம்புள்ள உதட்டுலதான் இருக்கிறான்
ஆறிலுள்ள மீனிலெல்லாம் அவன்தானே சிரிக்கிறான்.

பொங்கிவரும் சுனைதண்ணி பெருமானின் கிருபையோ?
பொங்கிவச்ச சோத்துமணம் எம்மானின் வார்த்தையோ?
அங்கிபோட்ட சாமியாரு அவன்கதையை சொல்லுறார்
அங்கமெல்லாம் பணிஞ்சுபோயி அடிமனசு குளிருது.

வஞ்சகரு வாதுவெல்லாம் வாலுறுத்துக் கொல்லுவான்
எஞ்சிநிக்கும் அரக்கரையும் இடுப்பொடுச்சி அனுப்புவான்
அஞ்சி அஞ்சி சாகுவோர ஆம்பளையா ஆக்குவான்
கொஞ்சவந்த கோபியரின் கொவ்வை கன்னம கிள்ளுவான்.

கண்ணுக்குள்ள கண்ணெவந்து கதைகதயா பேசுறான்
கண்ணெபேர சொல்லசொல்ல கருணை காத்தவீசுறான்
மண்ணளந்த வாமனனின வார்த்தைகீதை கேட்கையில்
எண்ணமெல்லாம் ஒடியாடி இவனடியில் சேருது.

கவிஞர். எம. பி. ஜெயமுருகன்-அரகண்டநல்லூர்.

லத்திலும், மற்றும் இரண்டுசிற்பங்கள் நிற்கும் தோரணையிலும் அமைந்ததாகக் கூறுகிறது.

தவிர, "முத்கல புராணம்" என்ற நூலிலேகணநாதனின்முப்பத்திரண்டு வகையான வடிவங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. கணபதியைத் தம் கற்பனைத் திறனுடன் பல வடிவங்களிலே அமைத்து மகிழ்ந்திருக்கின்றனர். நம் பண்டைக் கலைஞர்கள் உன்மத்த கணபதி, உச்சிஷ்டகணபதி, கேவல கணபதி, பால கணபதி, ஹேரம்ப கணபதி, வல்லப கணபதி, வீரகணபதி, நர்த்தன கணபதி, சுந்தர கணபதி, வரசித்தி விநாயகர், சித்தி புத்தி கணபதி என்று பலவகையான வடிவங்கள் யானைமுகக் கடவுளுக்கு ஆலயங்களிலே உண்டு.

பொதுவாக எல்லா விநாயகர் வடிவங்களிலும் விநாயகர் கரங்களில் மோதகம், பாசம், அங்குசம், பழம் ஆகியவற்றைக் காணலாம். மூஞ்சூறு வாகனம் எல்லாச் சிற்பங்களிலும் காணப்படும். "கிச்சிங்" என்ற இடத்திலுள்ள விநாயகர் சிற்பமொன்றில் விநாயகர் கரத்தில் "அக்ஷமாலை" ஒன்று மனித வடிவிலே உள்ள அபூர்வ சித்தரிப்பைக் காணலாம். இது நூதனமானதோர் சித்திரிப்பு. திருமாலின் சக்கரத்தில் "சக்கர புருஷுகை" சுதர்சனர் சித்திரிக்கப்படுவதைப்போன்று இந்தவிநாயகர் சிற்பத்தில் விநாயகரின் கரத்திலுள்ள அக்ஷமாலையில் "அக்ஷமால புருஷன்" சித்திரிககப்பட்டிருககின்றார்.





(20-ஆம பக்கத் தொடர்ச்சி)

யிருக்க, இடது கால் முத்திறகு நேராக உயர்த்தி உருவாககப்பட்டுள்ளது. 8 கைகள் கொணட இவனது 2 வலககைககளில் கத்தியும், சக்கரமும் காணப்பட, ஒரு கை மேலே நீட்டியபடி உளளது. இடது கைகள் இரண்டில சங்கும சககரமும் இருக்க, மறறொரு கை நீட்டிய இடது காலே ஒட்டிய நிலேயில் அமைக்கப்பட்டுள்ளது. ஆகமத்தில் கூறப்பட்ட கதை சார்ங்கம் மறறும கலப்பைக்குப் பதில் இங்குக் கததியும் கேடயமும் உருவாக்கப்பட்டுள்ளன. இருபுறமும் இமையோர்கள காணபபட, இவனது தலேககு மேல் இசைக் கருவியுடன் சாம்பவான் காணப்படுவது ஆகம விதிப்படி உளளது. இவன் அணிந்துள்ள கிரீட மகுடம் பொலிவுடன் உருவாக்கப்பட்டுள்ளது.

சேலம் மாவட்டம் நாமக்கல்லில் அதியமான மன்னன் குணசீலன் என்பவன் காலத்தில் அமைக்கப்பெற்ற இரு குடைவரைக் கோயில்கள் உள்ளன. மேற்புறமாக உள்ள குடைவரையில் கருவறைக்கு இடது புறம் திருமாலின் விண்ணுற வளர்ந்த வடிவம் புடை சிற்பமாக உள்ளது.

"அருமா நிலம் அனறு அளப்பான குறளாய
அவுணன் பெருவேள்வியில்
சென்றிரந்த பெருமான" [3-2-4]

என்ற மங்கை மன்னன் திருவாக்கிற்கேற்ப, மாவலியிடம் மூவடி நிலம் இரக்கும் வாமனின் வடிவம் ஒரு பக்கம் காணப்படுகிறது மற்றுமோர் புறத்தில் மாவலி மூவடி மண் வழங்குவதினின்றும் தடுக்கும் அவனது குருவான சுக்கிராச்சாரியாரைக் கருடன் அடிப்பது போன்று உருவாக்கப்பட்டுள்ளது. இன்னுமோர் புறத்தில் குதிரை புடை சிற்பமாக உள்ளது. வேள்வி நடக்கும் இடத்தில் இது நிகழ்வதைச் சுட்டிக்காட்டுகிறது.



"மாவலி வேள்வியில் மாணுருவாய்ச் சென்று
மூவடி தாவென்று இரந்த இம்மண்ணினே
ஓரடியிட்டு இரண்டாம்அடி தன்னிலே
தாவடியிட்டான்" [2-10-7]

என்ற பெரியாழ்வாரின திருவாக்கிற்கேற்ப விண்ணே அளக்கும் திரிவிக்ரம வடிவம் கலேயழகுடன் காணப்படுகிறது. தலேயில் கிரீட மகுடம் இலங்க, 4 கைகள் கொண்ட இந்த வடிவின் பின் வலக்கையில் கத்தியும் பின் இடக்கையில் சங்கும் இருக்க, முன் இடக்கை கடி முத்திரையில் உள்ளது. முன் வலக்கை,

'எனனிது மாயம் என்னப்பன் அறிந்திலன்
முன்னேய வண்ணமே கொண்டு அளவாய் எனன
மன்னு நமுசியை வானில் சுழற்றிய
மின்னுமுடியனே" [1-9-8]

என்ற பெரியாழ்வார் அருள் வாக்கிற்கு இணங்க, நமுசியை வானில் சுழற்றுவது போன்று உருவாக்கப்பட்டுள்ளது. ஆகமங்கள் நமுசியை விண்ணளந்தானின் காலருகில் கூப்பிய கைகளுடன் காட்ட வேண்டும் என்று விதித்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. நமுசிக்கு அருகில் சாம்பவான் உள்ளான். பின் இடக்கையில் சங்கும், பின் வலக் கையில் கத்தியும், முன் இடக்கை கடிமுத்திரையிலும், முன் வலக்கை நீட்டியபடியும் அமைந்துள்ளது ஆகமங்களில் கூறப்பட்டதற்கு வேறுபட்டு காணப்படுகின்றன. 'சில்பரத்தினம்' என்ற நூலின்படி இங்கு இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் மேலே தூக்கியபடி உள்ளது. இது முகம் வரை உயரக்காட்டப்பட்டுள்ளது.

கீழ்புறமாக உள்ள குடைவரைக் கோயிலில் கருவறையை ஒட்டி வாமனன் வடிவம் காணப்படுகிறது. 2 கைகள கொண்ட இநத வடிவின் ஒரு கையில் குடை இருக்க, மற்றொரு கை மாவலியிடம் மூன்றடி மண் பெற கையை நீட்டிய நிலேயில் அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள வடிவம் மேற்புறமாக உள்ள குடைவரைக் கோயிலில் புடை சிற்பமாக உள்ள வாமனனேக் காட்டிலும இளமை உடையவனுக உருவாக்கப்



சங்கராச்சார்யா மடம் - அலகாபாத்.

பட்டுள்ளது. இதை அடுத்துள்ள உலகளந்தானின் வடிவில் "சில்ப ரத்தினம்" என்ற நூலின் படி, இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் மேலே தூக்கிய நிலையில் காணப்படுகிறது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் முன்வலக்கை நீட்டியும், முன்இடக்கை கடி' முத்திரையிலும், பின் இடக்கையில் சங்கும் உள்ளன. இவையாவும் ஆகமத்தில் கூறப்பட்டதற்கு வேறுபட்டுள்ளன என்பது குறிப்பிடத்தககதாம். இந்தத் திருவுருவிற்கு மேல் சாம்பவானும், கந்தர்வர்களும் காணப்படுகின்றனர்.

திருப்பரங்குன்றத்தில் உள்ள பாண்டியர்கள் உருவாக்கிய குடைவரைக் கோயிலில் உக்ர நரசிம்மர் மற்றும் வராக வடிவங்கள் உள்ளன. மதுரையை அடுத்துள்ள ஆனைமலையில் உளள குடைவரைக கோயில்கள் ஒன்றில் நரசிம்மர் யோக வடிவில் மூலவராக அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் பாண்டியர்களது குடைவரைக் கோயில்களில் மண்ணளந்தான் வடிவம் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. முத்தரையர்கள் குடைவரைக் கோயில்களிலும் இந்த வடிவம் இல்லை. மேலும் நரசிம்மத்தையும் வராகத்தையும் மூலவராகக்கொண்ட குடைவரைக்கோயில்கள் உள்ளனவே அன்றி, உலகளந்தானை மூலவராகக் கொண்ட குடைவரைக்கோயில்கள் இல்லை.

குடைவரைக் கோயில்களை அடுத்து அமைககப்பெற்ற கற்றளிகளில் காஞ்சிபுரத்தில் உள்ள கைலாயநாதர் கோயில் திருச்சுற்றில் தென்புறத்தில் ஒரு சிற்றாலயததிலும், வட புறத்தில் ஒரு சிற்றாலயத்திலும் இந்த வடிவம் காணப்படுகிறது. அதே நகரில் உள்ள வைகுண்டப் பெருமாள கோயிலில் மாவலியிடம் மூவடி நிலம் இரந்து பெறும வாமனனின் வடிவமும, 8 கைகள கொண்ட விண்ணளந்தான திருவுருவும் அமைககப்பட்டுள்ளன.

விண்ணுற விமம வளர்ந்த திருமாலினது திருவுருவம் மூலவராக உள்ள திருககோயில்களில் ஒன்று காஞ்சிபுரத்தில் உள்ளது. சுமார் 30 அடி உயரமுள்ள இந்த வடிவின் வலக்கால் ஊன்றி இருக்க, இடக்கால் மேலே தூக்கிய நிலைய்ல் உள்ளது. வலக்காலுக்குக் கீழே மாவலி காணப்படுவது இங்குளள ஒரு சிறப்பாகும். இது திருமால் மூனறாவது அடிக்காக மாவலியின் தலைமீது கால் வைத்துப் பாதாளத்தில் அழுத்துவதைச் சுட்டிக்காட்டுகிறது. மாமல்லபுரத்திலும், நாமக்கல்லிலும் கால், முகம் வரை உயர்த்திக் காட்டப்பட்டிருக்க இங்கு இடது கால் நாபிவரை தான் தூக்கிய நிலையில் உள்ளது. 4 அல்லது 8 கைகள அமைக்கப்படாது 2 கைகள்தான் இந்த வடிவிற்கு உள்ளது மற்றுமொரு சிறப்பாகும். இரு கைகளும் நீட்டிய நிலையில் காணப்படுகின்றன. கைகளில் படைக்கலங்கள் ஏதும் அமைக்கப்படவில்லை.

உலகளந்தானை மூலவராகக் கொண்ட சிறப்புமிக்க கோயில் திருக்கோயிலூரில் உள்ளது. ஆழ்வார்களில் முதல் மூவர் எனறு பரவப பெறும் பொய்கையாழ்வார், பேயாழ்வார், மற்றும் பூதத்தாழ்வார் ஆகியோர் ஒன்றுகக் கூடிய தலம் இது. பொய்கையாழ்வார் "காமர் பூங் கோவல்" என்றும், பூதத்தாழ்வார் "கோவல் ... ஏவல்ல எந்தைக்கு இடம" என்றும், மங்கை மன்னன "செஞ்சாலி விளை வயலுள் திகழ்ந்து தோனறும திருக்கோவலூர்" என்றும் மங்களாசாசனம் செய்த திருத்தலம் இது.

சுமாா 18 அடி உயரத்துடன் முகப்பொலிவுடன் திகழும் இங்குள்ள மூலவர் ஏனைய கோயிலகளிலுள்ள மூலவரைப் போன்று கல்லாலோ அல்லது சுதையாலோ செய்யப் பெற்றவன் அனறு. இது மரததாலான வடிவம் என்பது இதன சிறப்பு. இது அதன் தொன்மையை உணாததுகிறது. நாமககல குடைவரைக் கோயில்களில் உள்ள வடிவங்கள் போன்று இங்கும் இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் தூக்கிய நிலையில் காணப்படுகிறது. காஞ்சிபுரத்தில் உள்ளது போன்று இங்கும் கால் நாபி வரைதான் தூக்கி அமைக்கப்பட்டுள்ளது. தூக்கிய திருவடியை

பிரமா பூசித்த நிலையில் காணப்படுவது இதன் மற்றுமோர் சிறப்பாகும். 4 கைகளை கொண்ட இந்த வடிவினரின் வலக்கை தூக்கிய, வலக காலை ஒட்டிய நிலையிலும், முன் இடக்கை கடி முத்திரையிலும், பின் வலக்கையில் சங்கும், பின் இடக்கையில் சக்கரமும் உள்ளன. முன் வலக் கையால் ஒரு விரலை நீட்டியுள்ளது மூன்றுவது அடிக்கு எங்கே காலை வைத்து அளப்பது என்று கேட்பதைக் குறிக்கிறது. இவனது காலுக்கு அருகில் ஆகமத்தில் விதித்தபடி நமுசி கை கூப்பிய நிலையில் காணப் படுகிறுன். முதல் மூன்று ஆழ்வார்களும், மார்க்கண்டேயா, சுக்கிராச்சாரியார் ஆகியோரும் இங்குள்ளனர்.

திருமாலுககு ஆயிரம் பெயர்கள் இருப்பினும், 24 பெயர்கள்தான் சிறப்பு மிக்கதாகக் கருதபபடுகின்றன. இந்தப் பெயர்களால் குறிப்பிடும் வடிவங்கள் ஒன்று போன்று இருப்பினும், சங்கு சக்கரம், கதை மற்றும் தாமரைப் பூ ஆகியவை எந்தெந்தக் கைகளில் உள்ளன என்ற அடிப்படையில் பெயர்கள் வேறுபடுகின்றன. "ரூபமந்தனம்" என்ற நூலின்படி, கேசவன் மறறும் வாசுதேவன் என்ற வடிவங்களுக்கும், 'பத்மபுராணம்' என்ற நூலின்படி, கேசவன பிரத்யுமன மற்றும் அரி என்ற வடிவங்களுககும் வலக்கையில் சங்கும், இடக்கையில் சக்கரமும் அமைக்கலாம். இருப்பினும் திருமாலின் வடிவஙகளில் பொதுவாக வலக்கையில் சக்கரமும, இடக்கையில் சஙகும்தான காணப்படுகினறன. ஆழ்வார்களும தங்களது திருப்பாசுரங்களில் இடக்கையால சங்கும், வலக்கையால் சக்கரமும் உளளன வாகத்தான் மஙகளாசாசனம் செய்துள்ளார்கள். உதாரணமாக.

"வலத்துறையும் சுடராழி"
[பெரியாழ்வார் திருப். 2[

"வலனேந்து சக்கரத்தான்"
[மங்கைமன்னன் 8-4-6]



பழநி திருக்கோயில் - எம். ராஜலட்சுமி

"வலந்தாங்கு சக்கரத்தண்ணல்"
[நம்மாழ்வார் 3-7-9]

"சங்கு இடக்கையிற் கொண்ட விமலன்" [ஆண்டாள் 5-2]

"சங்கம் இடத்தான்"
[குலசேகர ஆழ்வார் 4-1]

'இடங்கை வலம்புரி நின்று ஆரப்ப"
[பூதத்தாழ்வார்-இர. திரு. 71]

ஆனுல் இங்கு சங்கும் சக்கரமும் கைகளில் இடம் மாறியுள்ளமைக்குக் காரணம் இமையோர்களின் துன்பத்தைத் துடைக்க மாவலியின் பெருவலியை அடக்கிய மகிழ்ச்சிதான் என்று சொல்லப்படுகிறது.

"அடியால் படிகடந்த முத்தோ—அதன்றேல்
முடியால விசுமபு அளந்த முத்தோ—நெடியாய்
செறிகழல கள்தாள நிமிர்ந்துச்
சென்று உலகமெலலாம
அறிகிலமால் நீ அளந்த அன்று"
[பெரியதிரு-27]

என அறிதுயிலோனின் மனமகிழ்ச்சிக்குரிய காரணத்தை நம்மாழ்வார் கேட்கிறுர். மண்ணுலகை அளந்தமையால் இநத மகிழ்ச்சி உணடானதா அல்லது விண்ணைத்தாவி அளந்ததால் ஏற்பட்டதா என்கிருர் எனவே மாவலியின் பெருவலியைத் தொலைத்தது திருமகள் கேள்வனின் மகிழ்ச்சிக்குக் காரணம் என்பது புலனுகிறது. இதனுல்தான் இங்கு சங்கும் சக்கரமும் கைகளில் இடம் மாறியுள்ளன என்று சொல்லப்படுகிறது. ஆகமத்தில் சங்கை வலக்கையிலும் சக்கரத்தை இடக்கையிலும் அமைக்க விதி இருப்பினும, பொதுவாக இருப்பது போலன்றி இங்கு சங்கும் சக்கரமும் கைகளில் இடம் மாறி இருப்பது இதன் தனிச் சிறப்புகளில் ஒன்றும்.

முற்காலத்தில் வீரம் எவ்வாறு பெரிதும் போற்றப்பட்டது என்பதற்கு சஙக கால இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. ஒவ்வொரு மன்னனும தான வீரம் மிக்கவன் எனபதைக் காட்ட அரியணை ஏறியவுடன் அணடை நாடுகள் மீது படையெடுத்து வெல்வதை மரபாகப் பின் பற்றப்பட்டு வந்தது. உலகளந்தான தன் பேராற்றலால் உலகைக் கைப் படுத்தியது போன்று தாங்களும் தங்கள் வீரத்தால் உலகைத் தம் ஆளுகைக்குக் கீழ்படுத்துகிறேம் என்பதை உலகுக்கு உணர்த்த முற்கால மன்னர்கள் திரிவிக்ரம வடிவை ஆங்காங்கு அமைத்தனர்.

*

# திருமலையில் தங்கு வசதிகள்

முன் கூட்டியே பதிவு செய்து கொள்ள, தேவையான பணத்திற்கான மணியார்டர் ரசீது அல்லது டிமாண்ட் டிராப்டு ஒன்றினை "உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி. தேவஸ்தானம், திருமலை-517504" எனும் முகவரிக்கு ஆங்கில விண்ணப்பத்துடன் அனுப்பவும். 20 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்பியத்தொகை, தங்கும் தேதி, தங்கும் நபர்கள் ஆகிய விவரங்களை அனுப்புதல் வேண்டும்.

மேஜை, நாற்காலி, படுக்கை வசதிகளுடன் கூடிய கீழ்வரும் தங்கு வசதிகள் உள்ளன.

I. ஹில் வ்யூ சொகுசு அறைத தொகுதிகள், சங்கு மிட்டா, சேஷாத்ரி, அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்.

| | |
|---|---|
| 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 25/- |
| எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| எச். வி. சி. விருந்தினர் விடுதி பெரிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 50/- |
| எச். வி. சி. விருந்தினர் விடுதி சிறிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 25/- |

இந்த இடங்களுக்கு முன்கூட்டியே இடவசதிக்கான முன்பதிவு செய்து கொள்ளலாம்.

II. மங்களாபாவி குடில்கள், டி.பி.சி. 3-வது வரிசை மற்றும் ஆழ்வார் ஏரி குடில்கள் டி. பி. வெளிப்புற குடில்கள்.

| | |
|---|---|
| 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 20/- |
| 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 | ரூ. 70/- |
| எம. பி. சி 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 20/- |
| எம்.பி.சி. 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| டி.பி., ஏ.டி.சி., அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 15- |
| டி.பி., ஏ.டி.சி. அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 10/- |
| ஏ.டி.சி. கீழ்த்தளம் முதல் வரிசை | |
| 'ஏ' பகுதி | ரூ. 30/- |
| 'பி' பகுதி | ரூ. 30/- |

ஆர்ஜித சேவை கிருஹஸ்தர்கள் மட்டுமே இத்தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்து கொள்ளலாம்.

| | |
|---|---|
| III. எஸ்.வி. விருந்தினர் விடுதி மற்றும் என்.ஜி.ஜி. விடுதிகளில் தனி அறைத் தொகுதி | ரூ. 50/- |
| எஸ்.வி. விருந்தினர் விடுதியில் மூலை அறைத் தொகுதி | ரூ. 60/- |
| எஸ்.வி. விருந்தினர் விடுதியில் பெரிய அறைத்தொகுதி | ரூ. 70/- |
| IV. பிரயாணிகள் மாளிகையில் உட்குடில்கள் | ரூ. 70/- |
| சிறப்பு அமைப்புக் குடில்கள் | ரூ. 100/- |
| எச்.ஆர்.ஜி. குடில்கள் | ரூ. 250/- |

முன் பதிவு செய்தல் முடியாது. கிடைக்கும் காலி இடங்களைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

V. ஹில் வ்யூ சொகுசு குடிலில் உள்ள மோடிபவன்

| | |
|---|---|
| (நான்கு அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும் | ரூ. 250/- |
| ஸ்ரீநிகேதன் விருந்தினர் விடுதி ஒவ்வொன்றும் | ரூ. 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 750/- |
| இந்திரா விருந்தினர் விடுதி (ஒவ்வொரு அறைத் தொகுதியும்) | ரூ. 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 1000/- |
| பால குடீரம்-ஒவ்வொரு அறைத்தொகுதியும் | ரூ. 250/- |
| அறைத்தொகுதி முழுவதும் | ரூ. 1500/- |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி ஓர் அறைத் தொகுதி | ரூ. 250/- |
| அடித்தளத்திலும் முதல் தளத்திலும் உள்ள பெரிய அறைத்தொகுதிகள் ஒவ்வொன்றும் | ரூ. 750/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 2500/- |
| கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதன வசதி உள்ளது) | ரூ. 500/- |

முன்பதிவு வசதி கிடையாது. வேண்டுகோளுக் கிணங்க காலி இடங்களைப் பொறுத்து வழங்கப்படும்.

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி.தே. திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

VI. திருமணக் கூடங்கள் :

| | |
|---|---|
| சங்குமிட்டா குடில்கள் கிழக்கு எண். 260, 266, 267, 272. | ரூ 75/- |
| டி.பி. குடில்கள் எண். 71 வரிசை III எண்கள் 136 மற்றும் 152 | ரூ. 75/- |
| ருயா குடில்/கோகினேனி குடில் மற்றும் ஏ.டி.சி. எண். 99 | ரூ. 100/- |
| சிதம்பரம் செட்டியார் குடில் | ரூ. 125/- |
| பாலாஜி திருமண மண்டபம் | ரூ. 500/- |
| சீதாராம திருமண மண்டபம் | ரூ. 1000/- |

முன் பதிவுக்கு, 'இணை செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

# வினை தீர்க்கும் நாயகன்

“श्री यांसि बहुविघ्नानि” என்று வட மொழியில் ஒரு பழமொழி உணடு. அதன் பொருள், ‘நலலவைகளுக்கு இடையூறுகள் பல’ எனபதாகும். நல்லவைகள் செய்யும்போதும, நற்கார்யஙகளைத தொடஙகும்போதும நடுவில் இடையூறுகள் வராதபடி இருக்க, தடுகக நம் பெரியோர்கள காலம் காலமாக கடவுளை வழிபட்டு வந்துள்ளார்கள். எந்தக் கடவுளை வழிபட்டால் இடையூறுகள் களையப்பட்டு நற்கார்யங்கள் செய்யப்பட்டு மேன்மையை அடையலாமென்றால அதற்குப பதிலாக நம முன்னோர்கள வினைதீர்க்கும் விநாயகனையே வழிபட்டு வநதுள்ளார்கள்.

ஆதிசங்கரர் ஆறு மதங்களை ஸதாபித்தார்கள். அவைகள், ஸௌரம், காணபதம், சைவம், வைஷ்ணவம், சாகதம், கௌமாரம் எனபதாகும. இவற்றில் காணபதம என்றால கணபதியை முகய தெய்வமாக வழிபடுவதாகும். இம்முறைககு கணபதி பஞ்சாயதனம எனறு பெயராகும். பஞசாயதன முறை எனன எனபது யாமளதந்தரததில் கூறப்பட்டுள்ளது.

‘गणेशार्क हरीशानदुर्गाणां परमार्थवित्।
पूजयेदैक्यभावेन देवीभक्तश्च बुद्धिमान् ॥

उत्तर




இம்மாதிரி நான்கு மூலையிலும சக்தி, விஷ்ணு, சூரியன், சிவன் இவர்களை ஆவாஹனம் செய்து நடுவில் கணபதியை வைத்து பூஜை செய்யும் முறைககு கணபதி பஞசாயதன பூஜை என்று பெயராகும்.

கணபதியை நடுவிலும், ஈசான திக்கில் விஷ்ணுவையும், அக்னி மூலையில் சிவனையும், நைர்ருதி திககில சூரியனையும், வாயு மூலையில் அம்பிகையையும வைதது பூஜிக்க வேண்டும். இந்த தெய்வங்களை வைக்கும்போது மேற்கு முகமாக வைத்து ஆராதிப்பவன் கிழக்கு முகமாக உட்கார வேண்டும்.

‘देवानांहि सदा बुधैः।’ எனறு கூறப்பட்டுள்ளது.

தேவதைகளை உபாஸிக்கும விதம் மூன்று விதமாகக் கூறப்பட்டுள்ளன. வைதிகம், தாந்திரிகம், மிச்ரம், (கலப்பு) இவைகளில் தாநதிரிக முறை ஆறு விதமாகக் கூறப்படுகிறது. 1. தக்ஷிணம் நாயம், 2. ஊர்த்வாம் நாயம, 3. பூர்வாம் நாயம், 4. உததராம் நாயம், 5. பச்சிமாம் நாயம், 6. பாதாளாம நாயம் என்பனவாகும். இம்முறைகளால் அபேதம், ஸாயுஜ்யம், ஸாரூப்யம், ஸாமீபயம் என்ற நானகுவித வழிகளை அடையலாம்.

மேறகூறிய ஆறு முறைகளிலும் கணபதிககு இடமுணடு. முழுமுதற் கடவுளல்லவா?

விநாயகருககு ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வொரு பெயா, வாஹநம் முதலியவைகள் கூறப்பட்டுள்ளன.

கிருதயுகத்தில் பத்து கைகளுடன் சிங்கவாஹனத்துடனும், பெரியவயிற்றுடனும், விநாயகர் என்ற பெயரோடும் விளங்குவார்.

த்ரேதாயுகத்தில ஆறுகைகளுடன் மயில் வாகனனுகவும், வெண்மை நிறமுடையவனுகவும மயூரேச்வரன் என்ற பெயருடன விளங்குவார்.

துவாபரயுகத்தில் நான்கு கைகளுடன், எலியை வாகனமாகவும். சிவப்பு நிறமுடையவனுகவும் கஜானன் என்ற பெயருடன் விளங்குவார்.

கலியுகத்தில் இரண்டு கைகளுடன் குதிரையை வாகனமாகவும் தூம்ர (சிவப்பும்—கருப்பும் கலந்த) நிறமுடையவனுகவும் தூம்ர கேது என்ற பெயருடன துஷ்டர்களின் கூட்டத்தை அழிப்பவராகவும் விளங்குவார்.

இந்த விநாயகரின உறபததியைப் பற்றிபல புராணஙகள் பலவாறுகக் கூறுகின்றன. சிவ புராணம், பிரம்ம வைவர்த புராணம், ஸ்கந்தபுராணம்

டாக்டர். டி. ஜி. அனந்தசுப்ரமணியன்,
திருப்பதி.

லிங்க புராணம், ஸுப்ரபேதாகமம் இன்னும் பல நூல்களிலும் கூறப்பட்டுள்ளன. அநேகமாக எல்லா புராணக் கதைகளுடன அவருடைய கதை சமபந்தப்பட்டதாகவே இருக்கின்றன.

பிரம்மவைவர்த புராணத்தில் கணபதி கணடத்தில் ஐம்பதாவது அத்யாயத்தில் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

பார்வதிக்கும சிவனுக்கும் திருமணமாகி வெகு காலத்திற்குப்பின் ஸ்ரீ கிருஷ்ணனின அனுக்ரஹத்தால ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தையைப் பார்கக ஸகல தேவ, முனிவர்கள வந்து சென்றனர். ஆனல் நவக்ரஹங்களின் ஒருவரான சனைச்சரன் வரவில்லை. எல்லோருடைய

உங்களுக்குத் தெரியுமா?

## உணவு உட்கொள்ளுதல்

ஒரு வேளை (ஒரு நாளில்) சாப்பிடுபவன்-யோகி.
ஒரு நாளில் இரு வேளை சாபபிடுபவன்-போகி.
ஒரு நாளில மூன்று வேளை சாப்பிடுபவன-ரோகி.
ஒரு நாளில் நானகு முறை சாப்பிடுபவன்-இறநதவனே.

## உலகங்கள் மொத்தம் 14

1. பூ:லோகம், 2. புவ:லோகம, 3. ஸுவர் லோகம், 4. மஹ லோகம், 5. ஜன லோகம, 6. தப லோகம், 7. சத்ய லோகம. இவைகள மேல் உலகம்.

1. அதல, 2. விதல, 3. ஸுதல, 4. தராதல, 5. மஹாதல, 6. ரசாதல, 7. பாதாளம. இவைகள கீழ உலகம்.

இவை தவிர மேலுலகததில் ஸ்ரீ வைகுணடம அடக்கம.

## தானுகக் கெட்டவர்கள்

1. தொட்டுக் கெட்டவன் — பத்மாசூரன
2. தொடாமல் கெட்டவன — இராவணன
3. விட்டுக் கெட்டவன் — மஹாபலி
4. விடாமல் கெட்டவன — துரியோதனன
5. சொல்லிக் கெட்டவன் — விசுவாமித்திரன்
6. சொல்லாமல கெட்டவன் — ஹரிச்சந்திரன்.

## இரவில் எந்தப் பக்கம் தலைவைத்து படுப்பது

தன்னூர்-கிழக்கு; தங்கின ஊர்-மேற்கு; வேட்டகம்-தெற்கு, வேணடாத திக்கு-வடககு. ஒவவொன்றுக்கும் ஒவ்வொரு பலன் உணடு. வடதிசை தலை வைத்துப் படுக்கக்கூடாது.

## சாப்பிடும் முறை

நீர் கருககி, மோா பெருக்கி, நெய உருக்கி உணபவர்தம் பேரு ரைக்கில போமே பிணி. நீரைக காய்சசியும், மோா தண்ணியாகவும், நெய உருககபபடடதாகவும் இருந்தல் நல்லது.

## திருமண் தரித்தல் (விரல்களினுல்) பலன்

கட்டை விரலால இடடுக கொணடால் — காமம
ஆட்காடடிவிரலினுல இட்டுக கொணடால — மோக்ஷம
மோதிர விரலினுல் இட்டுக் கொண்டால — ஆயுள் விருத்தி
சுணடு விரலினுல் இட்டுக் கொணடால் — ஆரோககியம்.
இவை தவிர நடுவிரல கூடாது.

—அடியார்க்கடியவன-கேதாணடபட்டி.

தூண்டுதலால் சனைச்சரன் கைலாஸத்திற்குச் சென்றார். அங்கே சனைச்சரன் ரதனஸிம்ஹாஸனததில் புன்முறுவலுடன உடகார்நதிருநத பாாவதியை குனிநத தலையுடன் வணங்கி நின்றான.

வணங்கிய தலையையுடைய சூர்ய குமாரனை சனைசசரனைப் பார்த்து 'ஹே ! கிரகங்களுக்கு அதிபதியே! ஏன தலையை குனிநதவணணம் இருககிறாய் ! ஏன என்னையும் குழந்தையையும் பாாககவில்லை?' எனறு அனனை கேட்டாள். அதற்கு சனைச்சரன 'ஹே தேவி ! அவரவர்கள செய்தவினைகளை அவரவர்கள் அனுபவித்தே ஆகவேண்டும். நல்ல மனைவி நற்பிள்ளை ஸுகம், பிள்ளையின்மை, துஷ்ட மனைவி, மனைவியில்லாமை எல்லாமே அவரவா செய்த வினைப்பயனேயாகும். ஆகையால் நான என் வினைப்பயனை அனுபவிக்கிறேன். அதாவது நான் சிறு வயதிலிருநதே ஸ்ரீ கிருஷ்ணனிடம் பகதி கொணடு எப்பொழுதும தியானத்திலேயே ஈடுபட்டுக் கொணடிருந்தேன். என் தகப்பனார் சித்ரரதன் என்பவருடைய பெணணை எனக்குத் திருமணம செய்துவைததார். ஒரு நாள் அப்பெண ருதுஸ்நானம் செய்து தன்னை நன்கு ஆடை அணிகளினுல அலங்கரிததுக்கொணடு என முன் நினறு 'எனனைப் பாருஙகள், நான் எவவளவு அழகாக இருக்கிறேன' எனறு கூறினாள். நான் அவளைப் பார்க்காமல் தியானத்திலேயே இருநதேன். உடனே அவள் கோபங்கொணடு 'என ருது காலம தஙகளால் நஷ்டமடைந்து விட்டது' என்று கூறி, ஹே மூட, நீ எநத பொருளைப் பாாக்கிறாயோ ! அநதப் பொருள் உடனே அழிநதுவிடும். என்று சபித்தாள். பின் அவளால் அந்தச் சாபத்திறகு விமோசனம் செய்யப்படவில்லை. ஆகையினால நான் தங்கள் குழந்தையைப் பார்த்தால் ஏதாவது விபரீதம் ஏற்பட்டு விடுமோ எனறுதான் பார்க்கவில்லை" என்றான.

தேவியானவள் "தேவ! பரவா யில்லே. ஈசவரன இருக்கிறன். கவலேபபடாதே! குழந்தை உன பாா வையில் படட்டும்" என்று கூறினுள். சனிசசரன் தன இடதுகண ஓரத்தால் குழந்தையைப் பார்த்தான. உடனே குழநதையின தலே கீழே விழுநதது. இதைக கணட பாாவதி முதலான தேவாகள மயக்கமுற்று விழுநது விட்டார்கள. ஸ்ரீமந நாராயணன இநநிகழசசியைப் பார்தது விட்டுத தன வாகனமான கருடன மேல் ஏறிக் கொணடு புஷ்பபத்ரா எனற நதிக் கரையில தன் இனபத்தை அனுப வித்துவிட்டு வடக்கு திககில் தலேயை வைதது படுததுக்கொண்டிருநத ஆண யானேயின தலேயைத் தன் சகரதகி ஞல் கொயது எடுத்து வந்து பார்வதி யின் குழநதையின் கழுத்தில் பொருத திஞர்.

யானேயின தலேயை வைத்தவுடன பிரம்மா ஹுங்கார சப்தத்திஞல் பிராணன கொடுத்து பிழைப்பித் தாா. பார்வதி கஜமுகன் எனறு பெயா வைத்து அழைக்கலாஞள்.

அந்தக் குழந்தைக்கு யானேயின தலேயைவைபபானேன,மற்றைய மிரு கங்களின தலேயை வைக்ககூடாதா? என்ருல் அதற்கு ஒரு கதை இருக் கிறது. ஒரு சமயம் இநதிரன் புஷ்ப பதரா நதிக்கரையிலுள்ள உத்யான வனத்தில சஞ்சரித்துக்கொணடு இருக் கையில் அவ்விடத்திற்கு ரமபை எனற தேவலோக மாது வந்து சேர்நதாள். அவளேப் பார்த்து காமுறருன் இநதி ரன். துாவாஸ மகரிஷி வைகுண்டத திற்குச சென்றுவிட்டு அந்த உதயான வன வழியாக கைலாஸத்திறகுச சென்று கொண்டிருந்தாா. நடுவில் இந்திரனேப் பார்த்தவுடன வைகுண டத்திலிருநது கொணடு வநத பாரி ஜாதமலரை இந்திரனிடம்கொடுத்து,

'இநத மலரை எவனெருவன தலே யில் சூடிக்கொள்கிருனே! அவனுககு ஸகல காரியங்களும் ஜயமாகும். அவனேவிட்டு லக்ஷ்மி விலகமாட்

## திருமகளுடன் நிலமகளே பெருமாள் தன் பக்கத்தில் வைத்திருப்பதேன்?

பெரிய பிராட்டியார் தன் அருகில் இருக்கும்போது ஸ்ரீய:பதி யான ஸர்வேசுரன் பூமிப்பிராட்டியாரைத் தன் பக்கத்தில் வைத்து காட்சி கொடுபபது ஏன் எனற விஞ எல்லோா மனத்திலும் யெழக்கூடும்.

தன பிளளேகளுக்கு என்ன வேண்டும், தர்ம சீலர்களுககும், விஷ்ணு பக்தாகளுககும் எனன குறை, அதை நிவர்த்திக்க வழி என்ன? அநதக குழநதைககு ஊழ்வினே மலேபோல் உளளதே? எப்படி செல்வத்தை கொடுப்பது! இநத லோபிக்குப் போய் செல்வத்தை கொடுக்க வேணடிய நிாப்பந்தம உளளதே! என்று சதா சஞ்சலப்பட்டுக் கொணடே இருப் பவள் லெட்சுமி. லெட்சுமி ஒரு இடத்தில் நிலேக்கமாட்டாள் அதஞல் சஞ்சலா; சபலா என்ற அபக்கியாதி அவளுக்கு உண்டு.

பூமிப் பிராட்டியார் அசையாது நிலேதது நிறபவள. பொறுமையே வடிவமானவள். கோபம என்பது சிறிதுகூட இல்லாதவள். தாய் குழந்தை களே தன் மடிமேல் வைதது காப்பதுபோல் அனேத்து ஜீவராசகளேயும் தன் மேல் வைத்து போஷித்து வருகிருள். அதஞல்தான் பூமிப்பிராட்டி யாரையும் நம் பெருமாள் தம் பக்கத்தில் வைத்து ஆனந்தமாகக் காட்சி கொடுக்கிருர்.

கோயில்களுக்கு நிதி, ஆபரணங்களுடன் முககியமாக நிலம் போன்ற அசையாசசொத்துக்களே பெரியவர்களால நிறுவப்பட்டன. கோயில் நிர்வாகத்திற்கு நிதய பூஜைகளுக்கு கோயில் உணடியலே மட்டுமே நமபியிருப்பது உசிதம் அலல. அநத கோயில்களுககு உரிய நிலங்கள் போன்ற நிலேச் சொததுக்கள் சரியாக பராமரிக்கப்படவேணடும். தற் போதுளள நிலஙகளிலிருநது விளேச்சல் ஏதும் கோயில்களுக்கு வந்துசேரு வதில்லே. அதஞல் பல கோயில்களுககு நித்ய பூஜைகள்கூட சரிவர நடை பெருமல உளளது. இநத சிரமதிசையை போக்க அதற்கான முயற்சிகள் செயவது மிக்க அவசியமாகும்.

(நானகுநேரி வான மாமலேயில எண்ணேக்காப்பு உறசவத்தன்று அரசு உயர் அதிகாரிகளுடன ஸ்ரீ வானமாமலேராமாநுஜ ஜீயர் சுவாமிகள் கோயில நிலங்கள் குறிதது அதை நிவர்த்திகக வேண்டி அவசியத்தை வலி யுறுத்தி அக்கருததுககு அழுததம் கொடுப்பதற்காக மேற்கணடபடி அழ காக சமஸ்ககாரமாக விளக்கியது அங்குள்ள அனேவரையும் பரவசப் படுத்தியது.)

கேட்டு ரசித்தவர்: திருமதி. லெட்சுமி ரஙககுவாமி-நாட்டரசன்கோட்டை.

டாள்' என்று கூறினுர். ஆனுல் இந்திரன ரம்பையின மேல உளள ஆசையால் அமமலரை யானேயின தலேயில் வைத்சான. உடனே ரமபையும சென்றுவிடடாள. யானே யுமசெனறுவிடடது. அநத பெருமை வாய்நத யானேயின தலேதான் கஜமுக ஞக ஆனுன. ஆகையால் விநாயக னின் தலேயில் பாரிஜாத மலரைக் கொணடு அலங்கரிததுப பூஜை செய் செய்தால் எலலா காரியங்களும் ஸித்தியடைவதோடு, ஸகல ஐச்வர் யங்களும் ஏற்படும்.

### ஒறறைக் கொமபன

ஒரு சமயம் பரசுராமன காாதத வீர்யார்ஜுனன முதலான அரசர் களேக் கொன்று தன தகப்பனுககு தாப்பணம் செய்துவிட்டு கைலாஸத் திற்கு வநது சிவனே தெரிசனம் செயய வநதார் அப்பொழுது அவரைக கண பதி 'இப்பொழுது பாாக்க முடியாது. என்று கூறித் தடுத்து நிறுத்தினுர். உடனே பரசுராமனுக்குக் கோபம் வந்து கோடரியைத் தூககி கண பதியை வெட்டபபோனுா. கணபதி உடனே அநத கோடரிககு ஓலககா கத் தன் தந்தத்தைக கொடுததாா.

पितुर्व्यर्थमस्त्रं च दृष्ट्वा गणपतिः स्वत्रम्।
जग्राह वामदन्तेन नास्त्रं व्यर्थञ्चकार ह।।
निपत्य परशुर्वेगेन छित्वा दन्तं समूलकम्।
जगाम रामहस्तञ्च महादेवबलेन च।।

அதிலிருந்து கணபதி ஏகதநதனுக ஆனுர்

### மூஷிக (எலி) வாகனன்

கஜமுகாஸுரனுக்கும் கணபதிக்கும் யுத்தம் ஏற்பட்டது. அஸுரன் வலது புறத்து தநதத்தை ஒடித்துவிட்டான. அதையே ஆயுதமாககொணடு கண பதி அஸுரனே அடிகக ஆரமபித்தார்' அவன பயநது கொணடு எலியாக மாறி ஓட ஆரம்பித்தான். உடனே அவனேப் பிடிததுத் தனக்கு வாஹந மாக ஆககிக கொண்டாா. கண பதிககு சிங்கமும் ஒரு வாஹநமாகும்.

கணபதிக்கு இரண்டு கைகள் நானகு கைகள, எட்டு கைகள, பதது கைகள, பனனிரணடு கைகள் என்று பல கைகள் உண்டு.

விக்னராஜர் நானகு கைகள் உடையவர். ஹேரம்பர் எட்டு கைகள் உடையவா. விரிஞ்சி கணபதி பத்து கைகள உடையவர். மஹா கணபதி பன்னிரணடு கைகள் உடையவர். உச்சிஷ்ட கணபதி நானகு கைகள் உடையவா.

பொதுவாக விநாயகரை எல்லோருமமுதலில் பூஜித்து வழிபடுவது பாரத நாட்டில இன்றியமையாத தாகும். கணபதியை கீழ்க்கணட ச்லோகததினுல் வழிபட வேண்டும். அது அவருடைய உருவததைக் கூறு கிறது.

चतुर्भुजस्त्रिनेत्रश्च कर्तव्योऽत्र गजाननः।
नागयज्ञोपवितश्च शशाङ्कृत शेखरः।।
दक्षे दन्तं करे दद्यात् द्वितीये चाक्षसूत्रकम्
तृतीये परशुं दद्यात्, चतुर्थौ मोदकं तथा।।

சில ஊர்களில் விநாயகர் பிரஸித்த மாகக்கூறப்படுகிறது.

காலடியில் சாரதாதேவி கோவிலில் உந்மத்த உச்சிஷ்ட கணபதி காக்ஷி யளிக்கிறுர். தென்காசியில் விச்வநாத ஸ்வாமி கோவிலில் லக்ஷ்மீ கணபதி பிரகாசிக்கிறுர்.

கும்பகோணத்தில் நாகேஸ்வர ஸ்வாமீ கோவிலில் உச்சிஷ்ட கணபதி வீற்றிருக்கிறுா.

நாகப்பட்டிணத்தில நீலாயதாக்ஷி அமமன கோவிலில் ஹேரம்ப கணபதி (உலோகம்) காக்ஷியளிக்கிறுர்.

திருவனநதபுரததிலும், பட்டீச வரததிலும் பிரஸனன கணபதி இருக் கிறுர். இம்மாதிரி பற்பல க்ஷேத்ரங் களில் பற்பல ரூபமாகவும அதற்குத தகுநத புராண இதிகாஸங்களே கொணட விநாயகர்கள் காணப்படு கிறுாகள்.

எல்லா வினேப்பயனகளேத் தீர்க்கும் விநாயகரை என்றெனறும் வழிபடு வோமாக.



## கிருஷ்ணர் ஏன் அழுதார்?

பாரத யுத்தத்தில் அபிமன்யுவைப் பறி கொடுத்ததும் அர்ஜுனன் கதறி அழுதான். கிருஷ்ண பரமாதமாவும் அழுதார்.

"என்ன! மருமான் போய்விட்டானே எனறு நீங்கள அழுகிறீா களா?" என்று பிள்ளேயைப பறி கொடுதத அாஜுனன கேவலுடன் கேட் டான.

"இல்லே. உனககுப் போய் கீதோபதேசம் செய்தேனே, அதற்காக இப்படி அழுகிறேன" எனறுர் கிருஷ்ண பரமாத்மா!

## சான்ருேர்கள்

சானருேர்கள பிழையைததான வெறுபபாாகள. பிழை செய தவனே வெறுககமாட்டாாகள்.

—செனகா.

## பணிவு

பணிவு மறறவர்களேத் தன்பால் ஆகர்ஷிக்கிறது. காவம மற்றவர் களேத் தன்பால் அணுகவொட்டாது தடுககின்றது.

—சுவாமி சிவானநதா.

தொகுததவா திருமதி. கமலா மாரியபபன்-கோவை.

# அபூர்வத் தலங்கள் அறுபது

திரு எம். எஸ். பிச்சுமணி,
சென்னை-56

1. திருமால் அவசரக கோலத்தில், வலமிருந்து இடமாக பள்ளி கொண்ட திருத்தலம் திருவெஃகா. இத்தலம் காஞ்சீபுரத்தில் உளளது.

2. சிவபெருமான லிங்க உருவில் இல்லாமல, முழு உருவத்தோடு சுருண்டு படுத்துக் கொணடிருக்கும் ஒரேதலம் சுருட்டைப்பள்ளி. (ஆ.மா)

3. பிரம்மாவுககுத் தனிக்கோவில் உள்ள தலம கும்பகோணம.

4. பிரயாகை திருத்தலத்தில அபூர்வமாக அடர்ந்து காணப்படும் மரம ஒனறில் மூனறு கிளைகள் உள்ளன. அந்த மூனறும மும்மூர்த்திகளின் சொரூபமாகும்.

5. ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த "நம்பாடுவான்" என்ற வைணவ பக்தனுக்காக கருடாழ்வாரும், த்வஜ ஸ்தமபமும் சற்று விலகியுள்ள இடம் திருக்குறுங்குடியாகும.

6. ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த "நந்தனார்" எனற சிவ பகதனுக்காக நநதி சற்று விலகியுள்ள திருத்தலம் திருப்பஙகூர்.

7. பார்வதிக்கும், பரமசிவனுகரும் நடனப்போட்டி ஒன்றை நடத்தி பரமசிவன்தான் வெற்றி பெற்றார எனறதொரு தீர்பபை பளளி கொண்ட பரநதாமன சொனன இடம் சிதமபரம்.

8. சிவலிங்கம் சற்று சாய்நத நிலையில் காட்சியளிககும் திருத்தலம் திருப்புடை மருதூா. இத்தலம் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது.

9. பாடல் பெற்ற வைணவத் தலமான கூடழலகர் திருக்கோவில் ஒன்றில்தான நவக்கிரஹ சனனதியும அமைநதுள்ளது.

10 மனநோய் தீர்க்கும் வைணவத திருத்தலம் குணசீலம்.

11. மனநோய் தீர்க்கும் சைவத தலம் வள்ளி சேர்பாககம.

12. ஹரியும - ஹரனும் "சங்கர நாராயணனுக" இணைந்த இடம் சங்கரன் கோவில் திருத்தலத்தில்.

13. அம்மையும்-அப்பனும் ஒரே சமயத்தில இணைநது அர்த்த நாரீஸ வரனுகக காட்சி கொடுக்கும் திருத் தலம திருசசெங்கோடு.

14. திருமண் இயற்கையாகவே கிடைக்கும இடம திருநாராயண புரம்.

15. திருநீறு இயற்கையாகவே கிடைக்கும் இடம் மருதமலை.

16. இமயமலை அடிவாரத்தில் உள்ள "சிட்டன் சியூ" என்ற தலத்தில்தான் சீதாப்பிராட்டியாருக்குத் தனிக்கோவில் உள்ளது.

17. லட்சுமணருக்கு ரிஷிகேசத்தில் தனிக்கோவில் உள்ளது.

18. சென்னைக்கு அருகில் உள்ள "கோயம்பேடு" என்ற தலத்தில லவ குசலவர்களுக்குக் கோவில் உள்ளது.

19. இராவணனை ஜடாயு எதிாத்துப் போரிட்ட தலம் புள்ளம் பூதஙகுடி.

20. பெரிய நநதி உள்ள திருத் தலம தஞ்சாவூா.

21. நந்தி-சற்று விததியாசமான நிலையில்-சிவலிஙகததைப் பாராமல, கிழககே பார்த்து அமர்ந்துள்ள தலம் திருமுல்லைவாயல்.

22. அர்த்த சாம பூஜை இல்லாத சைவத்தலம் சுசீநதரம ஒன்றுதான்.

23. சிவபெருமான் தனது பக்தனுக்காக-நரிகளைப்பரிகளாகக் காட்டி அற்புதம நிகழ்த்திய திருத்தலம் நரிக்குடி.

24. கல கருடன் வாகனமாக உள்ள ஒரே வைணவத்தலம் நாச்சியார் கோவில் ஆகும்.

25 கல் நாயனம உள்ள சைவத் தலம திருவாரூர் ஒன்றுதான்.

26. எம தர்மனுக்குத் தனிக கோவில் உளள ஒரே ஒரு தலம் ஸ்ரீவாஞ்சியம். இங்கு எருமை வாகனமும் உள்ளது.

27. நமது ஆயுள் கணக்கை எழுதும் சித்திர குப்தனுக்குக் கோவில் உள்ள ஒரு தலம் காஞ்சீபுரம்.

28. பிரமமஹத்தி எனற பேய்க்குத் தனிக்கோவில் திருவிடைமருதூர் தலத்தில்தான் உள்ளது.

29. காமனை சிவபெருமான் தனது நெற்றிக் கண்ணால் எரித்த தலம் திருக்குறுக்கை.

30. யம தீர்த்தம் உள்ள தலம் தாராசுரம்.

31. இந்திரனால் கொண்டு வரப் பட்ட கடலநுரைப்பிள்ளையார் திருவலஞ்சுழியில் உள்ளது.

32. ஊரே இல்லாத பாடல் பெற்ற வைணவத் தலம் இரட்டைத் திருப்பதியாகும்.

33. உப்பு இலலாத பிரசாதம செய்து பகவானுககுப் படைககும் ஒரே ஒரு தலம் உப்பிலயப்பன் கோவில்.

34. கோரைக் கிழங்கைப் பக்குவப் படுத்தி பிரசாதமாக விநியோகிக்கும் ஒரு வைணவத திருத்தலம ஸ்ரீ முஷ்ணம.

35. வறுத்த பயிரை முளைக்க வைக்கும் சக்தி படைத்த வைணவத் திருத் தலம் திருபுட்குழியாகும்.

36. சித்திரை மாதத்தில் ஒரே சமயத்தில் சந்திர உதயத்தையும், சூரிய அஸ்த்தமனத்தையும பார்க்கும் ஒரு தலம் கன்னியாகுமரி.

37. சகதி வழிபாட்டால, அமாவாசை தினத்தனறு, பௌர்ணமி நிலவை வரவழைத்த தலம திருக்கடவூர்.

38. சிவபெருமான் 64 லீலைகள் புரிந்த இடம் மதுரை.

39. சிவபெருமான 360 லீலைகள் புரிந்த தலம் திருவாரூர்.

40 360 நாளும் திருமால் திருமணம் செய்து கொண்ட திருததலம் திருவெடவெநதை.

41. பெருமாள், நாசசியார், ஆழவார, பெருமை சோக்க முப்புரி யூட்டின திவ்ய தேசம ஸ்ரீவில்லிபுத்தூர்.

42. ஆதிசேஷன இப்பூவுலகில் முதவில் வநது தங்கிய திருததலம் திருநாகேஸ்வரம் ஆகும்.

43. சிவபெருமான தனனைத் தானே வேண்டிக்கொணட இடம் திருவிடைமருதூா.

44. வங்கக் கடல் கடைந்தபோது கிடைதத அமிர்ததை பங்கிட்டுக் கொடுதத தலம திருப்பாலைவனம.

45. தஞ்சை மாவட்டம், நன்னிலம் வட்டம் கூத்தனூா எனற தலத்தில் சரஸ்வதிக்குத தனிக்கோவில உள்ளது.

46. குறறாலத்தில அகத்தியருககுத் தனிக்கோவில உளளது.

47. திருத்துறைப் பூண்டிக்கு அருகில் உள்ள துளசியாப் பட்டிணத்தில் ஔவையாருககுத தனிக்கோவில் உள்ளது.

48. திருவள்ளுவருககுத தனிக்கோவில மயிலாப்பூா என்ற இடத்தில் உள்ளது.

49. திருப்போரூா திருமுருகன் திருசசனனதியில தீாததம் கொடுப்பது குறிப்பிடததககது.

50. ஐம்பது யோஜனை பரப்பளவு உள்ள பூலோகததையும, பஞசத் தலம எனற ஒரு தலததையும துலாக் கோலால் நிறுத்திப் பாாததுச் சொன்ன இடம திருமழிசையாகும.

51. பஞ்ச பாண்டவர்கள்-பஞச வரதாகளை ஒரே சமயம் பிரதிஷ்டை செய்த இடம உத்திரமேரூா.

52. நவவித மூலிகைகளால்-நவ பாஷாணம கொணடு தயாரிக்கபபட்ட முருகன் சிலை உள்ள தலம் பழனி.

53. சமுத்திரததில் நவக்கிரஹங்கள் உள்ள தலம் நவபாஷாணம ஆகும. இது தேவி பட்டிணத்தில உள்ளது.

54. இககலியுகத்தில் இன்றும திருச்சிக்கல் திருத்தலத்தில-சிங்கார வேலவனின திருவிழா சமயத்தில்-வோவைத் துளிகள் வேலவனின் உடலில அருமபிவழிவதைப்பார்க்கலாம்.

55. ஐந்து ஏக்கா பரப்பளவில், ஐந்து நிலை கோபுரததுடன ஐந்து பிரகாரங்களுடன, ஐந்தாம நாள் உற்சவததில் ஐநது கருட சேவைகள நடககும் ஓா அபூர்வத் திருத்தலம் திருக்குறுஙகுடியாகும்.

56. ஆழ்வாருககுத் தனிக்கோவிலும, தனிக்கொடி மரமும்உளள ஒரு தலம் மன்னார்கோவில்.

57. நாகா கோவில-நாகராஜா கோவிலைச் சுறறி ஒரு மைல் தூரம வரை எவரையும பாமபு கடிதது இதுவரை இறக்கவில்லை என்பது மிகவும அதிசயமாகும.

58. உடையவா காஷாய வஸ்த்திரததுடன இல்லாமல், தூய வெண்மையான வஸத்திரத்தோடு காட்சியளிக்கும் ஒரே தலம் மதுராநதகம.

59. மிகவும் அபூாவமான முறையில பன்னிரெணடு வருடங்களுக்கொருமுறை திருக்கழுககுன்றம் திருககுளததில சங்கு உறபத்தி ஆகிறது.

60. இரணியன வதததிறகுரிய வழிமுறைகளை ஆலோசிக்கதேவர்கள கோஷ்டியாகக்கூடியதிருத்தலம் திருக்கோஷ்டியூர்.

(இதுபோல அபூர்வத்தலங்கள் இன்றும் உள்ளன.)



## தங்கி விடுவது

மனிதனைப புதை குழிககு அனுப்பிவிட்டு மண்ணுக்கு மேலே நிறபவை அவனது குடும்பமும பொருளும; அவனோடு தஙகிவிடுவது அவன செயத நற்கருமங்களே.

—முகமமது நபி.

தொகுத்தவா: திருமதி. கமலா மாரியபபன-கோவை.

## பெண்ணிற்குப் பெயரிடுதல் முறை

பெண குழநதைகளுக்கு சீதா, மஙகளா, லலிதா, ரமா, உமா, சரோஜா, வனஜா எனறு பெயரிட்டார்கள. அதன் காரணம தெரியுமா?

பெண குழநதைக்கு மதுரமும, லாவிதயமும, தெளிவு, அழகு மங்களம் நிறைநததும நெடில் ஈறறும வாழ்த்தொலிப்பதாயும் உள்ள பெயரை இடவேண்டும் என்று மனு தாமததில் சொல்லபபட்டிருககிறது. அதனால்தான அப்படிப்பட்ட பெயர்களைச சூட்டியிருக்கிறாகள் நம் பெரியோர்.

ஆதாரம்: மனுதர்ம சாஸதிரம இரண்டாம் பாகம் - விதி 33.

திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

# கோவிந்த நாமாவின் மகிமை

திரு. என்.சந்திரசேகரன்,
திருச்சி.

நம் முன்னோர்கள் யுகத்திற்கு ஏற்றவாறு மனிதன் உயர்வதற்கான வழிகளை அமைத்துள்ளனர். விஷ்ணு புராணம கருத யுகத்தில் தியானத்தாலும், த்ரேதாயுகத்தில் யக்ஞத்தாலும், த்வாபர யுகத்தில் அர்ச்சனையாலும், இப்போது நடக்கும கலி யுகத்தில் நாம ஸங்கீர்த்தனத்தாலும சித்தி அடையலாம ('கலௌ ஸங்கீர்த்ய கேசவம்') என்று இயம்புகிறது அத்வைத ஆசார்யர்களான ஸ்ரீ ஆதி சங்கரர், 'ப்ரசனோத்தர ரத்னமாலிகை'யில் 'மானுடரால் ஸ்மரிக்கத் தக்கது எது?' என்ற கேள்விக்கு 'எக்காலத்திலும் ஹரிநாமமே' என்று பதிலளிக்கிறார்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் தங்களது பாசுரங்களிலும் பதிகங்களிலும் பல இடங்களில் நாம மஹிமையைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். திருஞானசம்பந்தர் அனல் புனல் வாதங்களில் வெற்றி பெற்றது இறைவனது நாமத்தைக் கொண்டுதான்! அப்பர் ஸ்வாமிகள் நாயிகா பாவத்தில் தன்னை வைத்துப் பாடுகையில்,

'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' எனும்போது ஈசனின் உருவத்தை அறிவதற்கு முன் அவன் நாமம் கேட்டாள். நாமத்தைக் கேட்டபின் அவனிருக்கும் வண்ணம் அறிந்து கடைசியில் அவனுக்கே பிச்சியானாள் என்பது நாமத்தின் மஹிமையை விவரிக்கிறது. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் தனது கொடுமுடிப் பதிகத்தில் 'நான் மறக்கினும் சொல்லு நா நமச்சிவாயவே' என்று ஐந்தெழுத்து மந்திரத்தைப் பத்துப் பாடல்களிலும் சொல்லி மகிழ்கிறார். இறைவனை குருவாக அடைந்த மணிவாசகப் பெருமானும் சிவபுராணத்தில்

'நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க'

என்று நாமத்தைப் போற்றிப் பின்னரே இறைவனின் மலரடிகளை வாழ்த்துகிறார்.

ஆழ்வார்களின் திவ்யஸூக்திகள் பலவற்றிலும் நாம மஹிமையை நாம் காணலாம். மங்கை மன்னர் 'கண்டு கொண்டேன் நாராயணா எனும் நாமம்' என்று கிடைப்பதற்கரிய செல்வம் பெற்ற களிப்பில் பாடுகிறார்.

'வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே'

என்று சம்பந்தர் பாடினால்,

'ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே உத்தமன் பேர்
ஏத்தும் திறம் அறிமின் ஏழைகாள் —ஓத்(து) அதனை
வல்லீரேல் நன்(று); அதனை மாட்டீரேல் மாதவன் பேர்
சொல்லுவதே ஓத்தின் சுருக்கு'

என்று பூதத்தாழ்வார் பாடுகின்றார். இருவரும் வேதத்தின் ஸாரமே இறைவனது நாமம் என்று பாடும்போது நமக்கு நாமத்தின் மஹிமை தெளிவாகிறது. நம்மாழ்வார் 'பாடீர் அவன் நாமம் வீடே பெறலாமே' என்று கூறி நமக்குக் கதி நாமம்தான் என்பதை உணர்த்துகிறார். திருவிசநல்லூர் ஸ்ரீதர அய்யாவாள் தனது கிணற்றில் கங்கையைப் பொங்கச் செய்த மஹான். இவர் சில நாம மஹிமைப்பற்றி ஆக்யாஷஷ்டி என்று நூலில் அறுபது ச்லோகங்களில் புகழ்கிறார்.

இறைவனின் எண்ணற்ற நாமங்களில் இரண்டு நாமங்கள் மிகப் பிரசித்தமாக உள்ளன. சிவனது நாமங்களில் 'ஹர' என்ற நாமமும், நாராயணனின் நாமங்களில் 'கோவிந்தா' என்ற நாமங்களே நம்மை அறியாமல் நாம் பல முறை சொல்லும் நாமங்கள். பொதுவாக பஜனைகளிலோ, சமய நிகழ்ச்சிகளிலோ, ஆரம்பத்திலும், மக்களின் கவனத்தை ஒருமுகப் படுத்த நடுவில் பல முறையும் 'நம: பார்வதீ பதயே' என்றோ 'ஸர்வத்ர கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்' என்றோ கூறுவது வழக்கம். கலந்து கொள்ளும் மக்கள் எல்லோரும் தம்மை அறியாமலேயே 'ஹர ஹர மஹாதேவா' என்றும் 'கோவிந்தா கோவிந்தா' என்றும் கோஷித்து நிகழ்ச்சிகளில் மனதை ஈடுபடுத்துவதை நாம் பார்க்கிறோம். நம்மில் பலர் 'ஹரோஹரா' 'கோவிந்தா' என்ற நாமங்களை பொருள் நஷ்டத்தைக் குறிக்கக்கூடத் தவறாக உபயோகிக்கிறோம். வேத மார்க்கத்தை அனுசரிக்கும் எல்லோரும், ஸ்மார்த்தர்களோ வைஷ்ணவர்களோ, தம்மைச் சுத்திப்படுத்திக் கொள்ள ஆசமனம் செய்யும்போது 'கோவிந்தாய நம:' என்று ஒரு தடவையும், பன்னிரு அங்கங்களைக் காக்க இறைவனின் நாமங்களைச் சொல்லும்போது, நமது கண்ணைக் காக்க 'கோவிந்த' என்று இரண்டாவது தடவையாகவும் சொல்கிறோம். இவ்வாறு நம்மை அறியாமல் கோவிந்த நாமாவை நாம் பல தடவைகள் சொல்கிறோம்.

இந்த கோவிந்த நாமாவிற்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம் என்பது பற்றிச் சிறிது ஆராய்வோம். கோவிந்தா என்ற பதத்திற்கு இரண்டு அர்த்தங்கள் சொல்லலாம். கோ என்றால் பசுக்கள், பூமி, ஆகாசம், வாக்கு, இந்திரியங்கள் என்று பல அர்த்தங்கள் உண்டு. கோவிந்தன் என்றால் இவைகள் தேடிப்போய் அடையும் லக்ஷ்யமான பரமாத்மா என்று ஒரு பொருள். பசுக்களை, ஜீவன்களை, தேவர்களை, வேதங்களை பூமியைக் காப்பவர் என்று இன்னொரு பொருளும் 'கோவிந்தன்' என்றபதத்

திற்குச் சொல்லலாம். ஸ்ரீ கிருஷ்ண ருக்கு கோவிந்த நாமாவை அளித்து இந்திரன் பட்டாபிஷேகம செயது வைத்தது ஸ்ரீமத் பாகவதத்திலும, விஷ்ணு புராணத்திலும், நாராயணீ யத்திலும விரிவாகக கூறபபடுகிறது. கர்வபங்கமுறற இநதிரன் பசுககளை யும் கோபர்களையும் காத்த லீலையைக் குறிககும் வண்ணம் ஸ்ரீகிருஷ்ணருக்கு இப்பெயரை அளித்தான.

ஆணடுதோறும் நநதகோபரும மற றவர்களும மழை கொடுக்கும இந்திர னுக்கு இந்திர பூஜை செயவது வழக கம். இந்திரனுக்கு தான் மழை பெய் விப்பதாலேயே பூலோகம வாழ்கிறது என்று கர்வம ஏற்பட்டது இதை அறிநத பாலக்ருஷ்ணர் ந ந் த ரி ட ம் "காட்டில் வசிக்கும் நமககு காடும் மலையுமே வீடாகிறது. அதனுல் பசுக் களையும், கோவர்த்தனகிரியையும், ப்ராம்மணர்களையும் பூ ஜி க் க லா ம். ப்ராம்மணர்கள் ஹோமம செய்யட் டும.பசுக்களுக்குப்புல் கொடுப்போம். மலைககு பலி போடலாம். முடிவில் கோவர்த்தனகிரியை ப்ர த க்ஷி ண ம் செய்யலாம்" எனறு கூற, நந்தரும் மற்றவர்களும் அவ்வாறே செய் தனர்.

இதனுல் இந்திரன் கோபமுற்று தூணபோல பெரிதான தாரைக ளுடன மழை பெய்வித்தான். எல் லோரும் நடுங்கி ஸ்ரீ க்ருஷ்ணரைச் சரணடைய, க்ருஷ்ணர் கோவர்த்தன கிரியை ஒரு கையில் தாங்கிக்குழந்தை கள் நாய்க்குடையை எடுத்துக குடை யாகப் பிடிப்பதுபோல் அனுயாஸ மாகப பிடித்து ஒரு வாரம் அப்படியே இருந்தார். ஸ்ரீ பாகவதம்,

> ஏகேன ஹஸதேன க்ருத்வா
> கோவாத்தனுசலம் |
> ததார லீலயா கருஷ்ண: சதரகம
> இவ பாலக: ||

எனறு விவரிககிறது. இது கணட இநதிரன மழையை நிறுத்தி, காம தேனுவுடன கருஷ்ணர் இருக்குமிடம வநது க்ருஷ்ணனை ஸ்தோத்ரம செய தார். காமதேனு தன் பாலால் க்ருஷ்ணனுக்கு அபிஷேகம் செய்ய, ஐராவதத்தால ஆ கா ய கஙகையி லிருநது கொணரப்பட்ட தீர்த்தத் தால் இநதிரன் அபிஷேகம் செய்து கோவிநதன் எனப் பெயரிட்டு பட் டாபிஷேகம் செய்து ஆனந்தமடைந் தான். பட்டாபிஷேக சமயத்தில் கொடிய விலங்குகளும் பகையை மறந்து இருந்தன. இவவைபவத்தை ஆழவார்களும அனுபவிதது பாடு கிறுர்கள. ஸ்ரீ வேதாந்த தேசிகா ஸ்ரீ க்ருஷ்ணா மலையை விரலகளால் தலைகீழாகத தூக்குகிறுன எனறு பாடு கிறுர். இநத கட்டத்தை விவரிககும சர்க்கம கோவிந்த பட்டாபிஷேக சாக்கம எனறு பெயா பெற்று முக்ய த்வம அடைந்துள்ளது.

கோவிந்த நாமத்தின மறறெரு சிறப்பை கா ஞ் சி ஜ க த் கு ரு ஸ்ரீ சங்கராசாரய ஸவாமிகள் தமககே உரித்தான பாணியில தனது உபன் யாஸ தொகுபபில கூறியுள் ளார்கள். ஆணடாள் திருப்பாவை யில் ஒரு பாட்டில், 'குறைவொன் றும் இலலாத கோவிநதா' என்று குறிப்பிடுகிறுள். பரிபூரண காமனை க்ருஷ்ணருக்கு என்ன குறை இருகக முடியும்? வாலமீகி ராமாயணத்தில் ராம பட்டாபிஷேகத்தை விவரிக்கும வாலமீகி அஷடவஸுக்கள இந்திர னுக்கு பட்டாபிஷேகம் செய்தது போலிருநதது என்கிறுர். அஹல்யை யிடம் தப்பாக நடந்து கொணடு கௌதமரின் சாபம் பெற்ற இந்திர னுடன ஏகபத்னீ வரதனை தன்னை ஒப்பிட்டது ஸ்ரீ ராமாநதிரமூர்த்திக் குப் பிடிக்கவிலலை. இந்தக் குறை யைப் போககிக் கொள்ள ஸ்ரீமநநாரா யணன் தனது க்ருஷ்ணுவதாரத்தில் இநதிரன தன கர்வத்திறகாக மன் னிப்புக கேட்டுத் தனக்கு கோவிநத பட்டாபிஷேகம் செய்விக்குமாறு லீலை புரிந்ததால் குறை ஒனறும இல்லாத கோவிந்தன் எனறு ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள தமககே உரிய ஆராய்சசி நோககில் கூறியுள்ளார்கள்.

பகவான் பசுக்களைக் காக்கும் கோவிநதனுக எப்போதும இருககிறா எனபதை Animal Citizen எனும பததிரிகையில வநத ஸ்ரீ டி எஸ். பாலகருஷண சாஸதிரிகளின கட் டுரை நிரூபிக்கிறது. ஒரு சமயம் சாஸதிரிகள காஞசிபுரம ஸ்ரீ மடத் தில ஆசார்ய ஸ்வாமிகளைத தரிசிககச் சென்றபோது ஸ்வாமிகள் சாஸ்திரி களை கோவிந்த பட்டாபிஷேக சர்க் கத்தைப் பாராயணம் செயயுமாறு பணித்தார்கள். பாராயணத்தின் போது ஸவாமிகள் சாஸதிரிகளுடன் பேசிக கொண்டிருநதாலும் அவர் களது கவனம் வேறு பக்கம் அடிக் கடித் திருமபிக கொணடிருந்தது நடு வில அருகிலிருந்த மாட்டுக் கொட்டி லிருநது ஒரு பசுவின தீனமான குரல் கேட்டது ஸ்வாமிகளஎழுநது சென்ற போது கூடசசெனற சாஸதிரிகளும் அஙகு ப்ரஸவ வேதனையில துடித்துக கொணடிருக்கும காட்சியைக் கண் டார். அப்பசு இரணடு நாட்களாக ப்ரஸவ வேதனையில் துடித்துக்கொண டிருநதது. அப்பசுவை சோதித்த மருததுவர்கள கன்று வயிறறிலேயே இறந்திருக்கலாம. ஆயுதம கொண்டு கன்றை வெளியில் எடுத்தாலதான் பசு உயிர் பிழைக்க முடியும் எனறு கூறிவிட்டாாகள. ஸ் வா மி க ள் அதறகு ஒபபவில்லை இரணடு தினங் களாக பசுவிடம் சென்று தடவிக் கொடுத்து பழம் முதலியவைகளை ஊட்டி அதைப் பராமரித்துக் கொண் டிருந்தாாகள். சாஸ்திரிகள் பசுவைப் பார்த்தது மூன்றும்நாளாகும. அன்று மாலை ஸ்வாமிகள சாஸ்திரிகள் மற் றும சில பக்தாகளுடன பேசிககொண டிருந்தபோது பயங்கரமாக மழை கொட்ட ஆரமபிததது. சிறிது நேரத்தில் பசுவின தீனமான குரல ஒலிகக, ஸ்வாமிகளும் மற்றும சில பகதர்களும் கொட்டிலில் சென்று பார்த்தார்கள். சில நிமிடங்களில் பசு கன்று ஈன்றது. அங்கிருநத எல் லோரும் நிம்மதி அடைந்தனா மாலையில் சாஸ்திரிகளிடம் ஸ்வாமி கள் 'கோவிந்த பட்டாபிஷேகம் படித்து முடித்தாயா?' என்று விசா ரிததுவிட்டுப பின்னர், 'கோவிநதன கோக்களை (பசுககளை) காக்க அவ தாரம செய்தான. ஆபத்துக் காலத தில் பசுககளைக் காப்பது அவன் பொறுபபு' எனறு திருவாயமலாநது அருளினாாகள.

மக்கள உயய கோவிநதனை வணங்கு என்று பஜகோவிந்த ஸ்தோததிரத் தில் 'பஜகோவிநதம் பஜகோவிந்தம் பஜகோவிநதம மூடமதே' என று ஆகஞாபிககும் ஆதிசஙகரரின், பசு பதியின் அவதாரமான ஆதிசங்கர ரின - வழி வநத ஆசார்ய ஸ்வாமி களைத் தவிர வேறு யாா பசுக்களை ரக்ஷிக்கும் கோவிந்தனின பெரு மையை எடுததுரைகக முடியும.



# தமிழ் எழுத்தில் வாழ்க்கை நெறி

மண்ணுலகில் தொன்மை வாய்ந்த மொழி தீந்தமிழ் மொழி. தித்திக்கும் தீந்தமிழ் இனிமை கண்டு திகட்டாத மோகம் அதன் மேல் கொண்டு மறறைய மொழியினரும் கற்றுணர்ந்து கவிதை பல யாத்த தமிழ். சொல் இனிமை, எழுத்தினிமை, பண் இனிமை எனப் பலவாறு போற்றப் பெறுதல் கண்கூடு.

தமிழ் எழுத்துக்கள வாழ்க்கைத் தன்மையினை வளமுறக் காட்டுதல் பற்றி சற்றே சிநதிப்போம். பாருக்கெல்லாம் திலகமாகத் திகழும் தமிழ் எழுத்தில் வாழ்க்கை நெறிமுறை உள்ளடக்கியிருப்பது வியப்பான தன்றோ? இதையறிந்தே பாட்டுக்கொரு புலவனை பாரதி "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்" என்று கூறினரோ என்றெண்ணத் தோன்றுகிறது.

**திரு வெ. சுந்தரமய்யர் - பரமக்குடி.**

உயிர் எழுத்து "அ" முதல் "ஔ" வரை அமைந்தது. "க" முதல் "ன" வரை மெய் என்ற உடலாகும். உயிரில்லா உடலுக்கு மதிப்பே இல்லை. உயிர்கள உடலில் இணைந்து பல அரிய செயல்களைச் செய்வதைக காட்டுவது உயிர்மெய எழுத்துகக ளின்தன்மை. ஈதெல்லாம் வெளிப் பாடாக நாம் அறிநதவை. அகப பொருளாக வாழ்க்கை நெறியை உயிர் எழுத்துக்கள் அமைத்திருப்பது உற்று நோக்கின் தமிழின, தமிழ் சொல்லின், முன்னோர் உருவாக்கிய தமிழ் வரி வடிவத்தின் உட்பொருளை ஆராய்ந்தறியும்போது வியப்பின் எல்லை விரிவடைகின்றது.

உயிர் எழுத்துக்கள் மொத்தம் 12க்குள் முதலாம் "அ" என்னும் எழுத்து.

மனிதப் பிறவியில் தாயின் கருவிலிருந்து உலகில் வெளிப்படும் குழந்தை "அ...அ" என அழுது கொண்டே அவதரிக்கின்றது.

பின்பு வளரும் போது "ஆ...ஆ" என்று தன் ஆவலை, ஆதங்கத்தை வெளிப்படுத்தும்.

சற்று வளர்ந்த நிலையில் எப்பொருளைக் கண்டாலும் யாரைக் கண்டாலும் "இ ... இ" என இன்முகத்துடன் சிரித்து மகிழ்கிறது. அக்கள்ளமற்ற ஆவல் மிக்க இளந் தளிரின் சிரிப்பில் இதயம் பறி கொடுக்காதார் யாருமில்லை.

இளம் வயது. கல்விக்கூடம் சென்று கற்றல், கலை பல அறிதல். இக்காலம் இளம் காளைப்பருவமாய் அமைய, பாலுணர்வு தோன்றும் காலம். பெண் ஆணைப் பார்த்தாலும், ஆண் பெண்ணைப்பார்த்தாலும் "ஈ" எனப் பல்லைக் காட்டடல்.

இதனை முறையாக, வாழ்க்கை நெறிப்படுத்த விரும்பும் பெற்றோர் திருமணம் நடத்தி விடுவர். "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப" என்பது தொல்காப்பியர் கூற்று.

பொய்யும் வழுவும் தோன்றுவண்ணம் திருமண வாழ்வில் திசை திருப்புவர். இப்போது பொறுப்பு ஏற்படும். அத்தோடு பணிவும் வளைந்து கொடுக்கும் தன்மையும் ஏற்படும். இதை உணர்த்துமுகமாக உழைப்பு உறுதுணையாகிவிடும். உழைப்பு, உண்டாகும் பணிவு அதனால் ஏற்படும் உயர்வு. இவற்றைக் காட்டும் "உ" என்ற எழுத்து.

இல்லற வாழ்வில் ஏற்படும் இன்பத்தால் உருவாகும் மக்கட்பேறு. உற்றார் உறவினர் நன்மை தீமைக ளில் கொள்ளும் பங்கு குடும்ப பாரம் சுமந்திடும் காட்சி "ஊ". ஆம் "உ" என்ற எழுத்தின் மேல் "ள" ஏறி அமர்ந்து சுமையாக நிற்கும்.

எல்லாவற்றிலும் சமாளிக்கும் தன்மையும், எளிமையில் இன்பமும் எழில்மிகு வாழ்க்கையும் அமைவ தனாலே இனிமை என்பதை உணர்த்தும் "எ" என்ற எழுத்து.

ஏழிசை நாதம்போல் ஏற்றம் பெற்று வாழ்ந்தால் ஏக்கம் பெருமூச்சு இல்லாத ஏவின பணிசெய்ய எல்லோரும் உதவும் வகை ஏற்படும் வகையில், ஏற்புடைய வாழ்க்கை வாழ்ந்து ஏணிபோல் தானமைந்து எளியவரை வாழ்வில் ஏற்றம் காண ஏற்றிவிடும் உதவிகள் செய்தல் பற்றிய குறிப்பே "ஏ".

நன்மையும் தீமையும், பிறப்பு, இறப்பு, இல்லறச்சிக்கல், பணிபுரியும் தொழிலில் பல சிக்கல் வாழ்வில் தோன்றும் விதவிதமான சிக்கல் அத்தனையிலும் நெளிவு சுளிவோடு நடந்து கொண்டு வாழ்வினை வளமாக்குதல் கடமையாகும். இச்சிக்கலையும் வளைந்து கொடுத்து வளம் பெறவும் வழிகாட்டும் "ஐ" என்பதாகும்.

அத்தனை வளைசல்களும முடிந்த பின் "ஐ" என்ற எழுத்து சிறப்பாக அமையும். வாழ்க்கைச் சிக்கல்களை வழி முறையுடன் ஒழுங்குபடுத்தும் நிலைமைவிளக்கும் "ஒ" என்பதாகும். தன் மக்கள் கல்வி முடிக்கச்செய்து கலைகளில் வல்லோராக்கித் திருமண முடித்து தன் வாழ்க்கைப் பயணத்தில் ஒழுங்கினை நிலைநாட்டி, ஒற்று

# வேண்டியவை

மதிக்க வேண்டியவை:
தர்மம், முதுமை, சட்டம்.
விரும்ப வேண்டியவை:
தூய்மை, நேர்மை, கடின உழைப்பு.
பாராட்ட வேண்டியவை:
அறிவு, குணம், அழகு.
வளர்த்துக் கொள்ள வேண்டியவை:
அஞ்சாமை, உற்சாகம், திருப்தி.
காப்பாற்ற வேண்டியவை:
தேசப்பற்று, நட்பு, செல்வாக்கு.
விலக்க வேண்டியவை:
புகைப் பிடித்தல், மது, சூதாடல்.
கட்டுப்படுத்த வேண்டியவை:
பேச்சு, நடத்தை, செயல்.
ஒழிக்க வேண்டியவை:
சோம்பல், பொய்கூறல், புறங்கூறல்.

தொகுத்தவர் : திருமதி. கமலா மாரியப்பன்-கோவை.

## காளை மாடு சிவபெருமானுக்கு வாகனம்-ஏன்?

இவ்வுலகத்தையும் இவ்வுலகத்திலுள்ள பொருள்களையும் படைத்த சிவபெருமான் நல்லதையெல்லாம் மக்களாகிய நமக்குத் தந்துவிட்டுக் கழிவாக உள்ளனவற்றையே அவன் எடுத்துக் கொள்கிறான். காளை மாடும் காலமெல்லாம் நமக்கு உழைத்துவிட்டு நல்லதையெல்லாம் நமக்குத் தந்துவிட்டு, கழிவுப் பொருட்களையே அது எடுத்துக் கொள்கிறது.

**சிவன் :**

நல்ல இடங்கள் நமக்கு — சுடுகாடு அவனுக்கு
நல்ல பாத்திரங்கள் நமக்கு— மண்டை ஒடு அவனுக்கு
நலல அணிகலன்கள் நமக்கு— பாம்பு அவனுக்கு
நல்ல ஆடைகள் நமக்கு — புலித்தோல் அவனுககு

இதுபோல்

**காளைமாடு :**

நெல் நமக்கு — வைக்கோல் அதற்கு
அரிசி நமக்கு — தவிடு அதற்கு
சோறு நமக்கு — கழுநீர் அதறகு
உணவு நமக்கு — இலை அதறகு

இப்படி பல ஒற்றுமைகள் இருப்பதால்தான் காளைமாடு சிவனுக்கு வாகனம்.

புலவர் திலகம் புலவர் கீரன் சொற்பொழிவில்.

கேட்டவர்: என். எஸ். முத்துகிருஷ்ண ராஜா-இராஜபாளையம்.

கச் செய்து, தன் கடமையின் நிறைவைக் களிப்புடன் செய்து முடிக்கும் ஒழுக்கத்தைக் காட்டும் "ஓ" என்னும் எழுத்து.

தன் பணி நிறைத்து வயோதிகம் வரும் போது மக்களால் நன் முறையில் பேணப்படும் பெற்றோர், ஓய்வு கொள்ளும் நிலைமை உருவகப்படும் "ஓ" என்ற எழுத்தாகும்.

ஓய்வு கொண்ட முதியோர்கள் முன்பு ஏற்றிருந்த இல்லறச் சுமை இறக்கப்பட்டது என்பதை உணர்த்தும் "ஔ" "உ" என்பதன் மீது சுமையாக ஏறிய "ள" ஓய்வு பெற்ற பின் "ஒ" என்பதன் அருகே இறக்கி "ஔ" என வைக்கப்படும்.

முழுமையாக ஓய்வு கொள்ளாது அவ்வப்போது தன் குடும்பத்திற்குத் தக்க ஆலோசனை கூறும் நிலையில் பக்கத்துணையாக பண்பினை ஊட்டும் பெரியோர் தக்கவே அருகிருந்து உதவுவதை அவனிக்கு உணர்த்தவே "ஔ" என்ற எழுத்தாம்.

இறுதிக் காலமதில் இருபுறமும் தூக்கிச் செல்ல மேலாக இருக்கும் உயிரற்ற உடல் என்பதனை உருவகப் படுத்தும் "ஃ" என்ற ஆய்த எழுத்து.

பிறப்பு முதல் வளர்ப்பும் காட்டி இறப்பையும் சுட்டிக்காட்டும் வகையில் உயிர் எழுத்துக்களும் அதன் முடிவாக அமையும் ஆயுத எழுத்துமாகும்.

வாழ்க்கை நெறிதனனை மொழியும் எழுத்தாக்கி விளக்கிடும் வித்தை தமிழில் தான் எனறால வியப்பேது?

தமிழர் பண்பாடு, தமிழின் செயல்பாடு, தனித்தன்மை கொணடு தத்துவம நிறைகும பெருமையை உணர்நது ஒவ்வொரு செயலிலும் உள்ள மெய்ப்பொருள் உணர்நது மேதினிக்கு உணர்த்துவது தலையாய செயலாகும்.

பண்டைய பண்பாட்டின் பாங கறிந்து இன்றைய வாழ்வின் வளத்திற்கு உதவும் தன்மையுணர்ந்து, சிறப்புறச் செய்தல் ஒவ்வொருவரின் கடமையாகும். ★

# அர்க்யமும் காயத்ரீ ஜப முறையும்

நமது நித்திய கர்மாக்களின் விதிகளைத் தர்மசாஸ்திரம் மிகவும் தெளிவாகப் பின்வருமாறு போதிக்கின்றது:

द्विघटी तूदयावर्वाक् प्रहरार्धं तथोपरि ।
सन्ध्याकालस्सविज्ञेयो ह्यन्यथा लंघनं स्मृतम् ॥

உதயத்திற்குமுன் இரண்டு நாழிகை சந்தியாவந்தனத்திற்கு முக்கிய காலமாகும். உதயத்திற்குப் பின்பு அரையாமமும் (3½ நாழிகை) சந்தியா வந்தனத்துககு கௌண காலமாகும். அதற்குப் பிறகு செய்தால் ஸந்தியையை அதிக்ரமித்ததாகும் என்று அறியவும்.

ब्रह्मा—

धाराच्युतेन तोयेन सन्ध्योपास्तिर्विगर्हिता ।
न प्रशंसन्ति पितरो न प्रशंसन्ति च देवताः ॥

ப்ருமமா: தாரையாய் விழும் ஜலத்தினால் செய்யப்படும் ஸந்தியாவந்தனம் நிந்திக்கத் தக்கதாகும். இதைப் பித்ருக்களும் தேவர்களும் புகழ மாட்டார்கள்.

उपवीतो बद्धशिखः स्वाचान्तो द्विरनाकुलः ।
प्राङ्मुखस्सततं विप्रः सन्ध्योपासनमाचरेत् ॥

வ்யாஸர்: யக்ஞோபவீதம் தரித்து, சிகையை நன்றாகக் கட்டிக் கொண்டு இரண்டு முறை ஆசமனம் செய்து வேறு இடத்தில் புத்தியைச் செலுத்தாமல் ஸந்த்யோபாஸநம் செய்ய வேண்டும்.

कराभ्यां तोयमादाय गायत्र्याचाभिमन्त्रितम् ।
आदित्याभिमुखस्तिष्ठन् त्रिरूर्ध्वमथ
चोक्षिपेत् ॥

இரண்டு கரங்களாலும் ஜலத்தை எடுத்துக் காயத்ரியினால் அபிமந்த்ரணம் செய்து ஸூர்யனுடைய எதிரில் நின்று கொண்டு மூன்று தடவை அர்க்யத்தை உயரே தூக்கிவிட வேண்டும்.

संग्रहे

द्वौ हस्तौ युग्मतः कृत्वा पूरये देकमंजलिम् ।
गोशृंगमात्रमुद्धृत्य जलमध्ये जलंक्षिपेत् ॥

இரு கைகளையும் சேர்த்து ஒரு அஞ்சலி ஜலத்தை பூர்ணமாகச் செய்து பசு மாட்டுக் கொம்பு அளவு உயரே எடுத்து ஜலத்தில் அர்க்யம் விடவும்.

जलेष्वर्घ्यं प्रदातव्यं जलाभावे शुचिस्थलं ।
संप्रोक्ष्य वारिणा सम्यक् ततोऽर्घ्याणि
प्रदापयेत् ॥

பொதுவாக ஜலத்தில் அர்க்யம் விட வேண்டும். ஜலமில்லாத இடத்தில் சுத்தமான தரையில் தீர்த்தத்தினால் ப்ரோக்ஷித்து அர்க்யங்களைவிட வேண்டும்.

प्रातर्मध्याह्नयोस्तिष्ठन् सायमासीन एव वा ।

காலையிலும் மத்யான்ஹத்திலும் நின்று கொண்டு அர்க்யம் கொடுக்க வேண்டும். ஸாயங்காலத்தில் உட்கார்ந்து கொண்டு அர்க்யம் கொடுக்க வேண்டும்.

शंखः—

गृहेत्वेकगुणं प्रोक्तं नद्यादौ द्विगुणं स्मृतम् ।
गवां गोष्ठे दशगुणं अग्न्यगारे शताधिकम् ॥
सिद्धक्षेत्रेषु तीर्थेषु देवतायाश्च सन्निधौ ।
सहस्र शतकोटीनां अनन्तं विष्णुसन्निधौ ॥

சங்க: ஜபம் செய்யும் ஸ்தலத்தைப் பற்றியது. க்ருஹத்தில் ஜபம் செய்வது ஒரு பங்கு பலத்தையும், நதிதீரத்தில் இரண்டு பங்கும், பசுமாட்டுக் கொட்டியலில் பத்து பங்கும், அக்னி சாலையில் நூறு பங்கும், ஸித்த க்ஷேத்திரங்களிலும், புண்ணிய தீர்த்தங்களிலும் தேவதா ஸந்நிதியிலும் நூறு கோடிகளுடைய ஆயிரம் பங்கும் பலனகள் கிட்டும். விஷ்ணு ஸந்நிதியில் ஜபம் செய்தவர்களுக்குக் கிடைக்கும் பலன் அளவிட முடியாததாகும்.

मनुः—

पूर्वां सन्ध्यां जपंस्तिष्ठेत्सावित्रीमार्क दर्शनात् ।
पश्चिमां तु समासीनः सम्यगार्क्षविभावनात् ॥

மனு: காலை ஸந்தயாவந்தனத்தில் காயத்ரி ஜபம், நின்றுகொண்டு ஸூர்யோதய பர்யந்தம் செய்ய வேண்டும். ஸாயங்கால ஸந்த்யாவந்தனத்தில் நக்ஷத்ர உதய பர்யந்தம் காயத்ரி ஜபம் உட்கார்ந்து செய்ய வேண்டும்.

उत्तमं मानसं जप्यं उपांशु मध्यमं स्मृतम ।
अधमं वाचिकं प्राहुस्सर्वमन्त्रेषु वै द्विजाः ॥

காயத்ர் ஜபம் மனஸினால் செய்வது உத்தமமாகும். உதடு, நாக்கு இந்த அவயவங்கள் அசைய சிறிய குரலில் பிறர்க்குக் காதில் விழாமல் ஜபம் செய்வது உபாம்சு என்று சொல்லப்படுகிறது. அந்த மாதிரி ஜபம் செய்வது மத்யமாகும். பிறர் காதில் விழும்படி ஜபம் செய்வது வாசிகமாகும். அந்த மாதிரி ஜபம் செய்வது அதமமாகும்.



पितामह :

एवं जप्त्वा यथाशक्ति ह्युदितेतु दिवाकरे ।
उत्तमेन्यनुवाकेन उद्वास्यतु यथागतम् ॥

ஸூர்யோதய பர்யந்தம் காயத்ரி ஜபம் செய்து பிறகு 'உத்தமே சிகரே' என்ற மந்த்ரத்தினால் காயத்ரீ உத்வாஸனம் செய்ய வேண்டும்.

(ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரம்).



# முக்கியமான சில தல விநாயகர்கள்

1. அன்பிலாவந்துறை — செவிசாய்த்த விநாயகர்
2. நாகப்பட்டிணம் — பஞ்சமுக விநாயகர்
3. காஞ்சிபுரம் — வலம்புரி நாயகர், விகடசக்கர விநாயகர்.
4. மதுரை — முக்குறுணிப்பிள்ளையார், சித்தி விநாயகர்
5. சீர்காழி — ஆபத்துக்காத்த விநாயகர்
6. வல்லம் — வரசித்தி விநாயகர்
7. திருவாவடுதுறை — துணைவந்த விநாயகர், அழகிய விநாயகர்.
8. திருவிடைமருதூர் — ஆண்ட விநாயகர்
9. திருவையாறு — ஆதி விநாயகர்
10. திருச்சிராப்பள்ளி — உச்சிப்பிள்ளையார்
11. திருக்காராயில் — கடுக்காய் விநாயகர்
12. திருக்கடவூர் — கள்ளவாரணப்பிள்ளையார்
13. தில்லை — கற்பக விநாயகர், திருமுறை காட்டிய விநாயகர், முக்குறுணி விநாயகர்.
14. தியுமுருகன் பூண்டி — கூப்பிடு விநாயகர்
15. திருநாட்டியத்தான்குடி — கைகாட்டி விநாயகர்.
16. திருமறைக்காடு — சிந்தாமணி விநாயகர்
17. திருமழப்பாடி — சுந்தர கணபதி
18. திருநள்ளாறு — சொர்ண விநாயகர்
19. திருபனையூர் — துணையிருந்த விநாயகர்
20. திரு இன்னம்பர் — நிர்த்தன விநாயகர்
21. திருவிழிமிழலை — படிக்காசு விநாயகர்
22. திருப்புறம்பயம் — பிரளயம் காத்த பிள்ளையார்
23. திருமாகறல் — பொய்யா விநாயகர்
24. திருநாரையூர் — பொல்லாப் பிள்ளையார்
25. திருவாரூர் — மாற்றுரைத்த விநாயகர்
26. திருச்செங்கோட்டங்குடி — வாதாபி விநாயகர்
27. திருவலஞ்சுழி — வெள்ளை விநாயகர்
28. திருவேதிகுடி — வேதப்பிள்ளையார்
29. திருநல்லூர் — சாளக்கிராம விநாயகர்
30. விருத்தாசலம் — ஆழத்துப் பிள்ளையார், மாற்றுரைத்த பிள்ளையார்.
31. டிட்வாலா (பம்பாய்) — கல்யாண கணபதி
32. சேண்பாக்கம் (வேலூர்) — ஸ்வயம்பு கணபதி
33. திருப்பத்தூர் (வ.ஆற்காடு) — மாயப்பிள்ளையார், வலம்வந்த விநாயகர்
34. திருவலம் ( ,, ) — வலம் வந்த விநாயகர்
35. புதுச்சேரி (பாண்டிச்சேரி) — மணக்குளப் பிள்ளையார்
36. பிள்ளையார்பட்டி (குன்றக்குடி) — குகை கணபதி
37. பாலி — வல்லான கணபதி
38. காசி — தூண்டி விநாயகர்
39. ஹளபேடு — வலம்பு விநாயகர், நர்த்தன கணபதி
40. விஜயபுரி — விக்னராஜர்
41. தேவூர் — ப்ரும்ம வரதர்
42. மயூரேசம் — பூஸ்வானந்தர்
43. மட் — வரத விநாயகர்
44. சித்தடேக் — மதுகைடப வரதர்

—தகவல் : திருமதி. டி. கமலவேணி தனபதி, திருச்சிராபள்ளி.

# அடியார் பெருமை

இறைவனிடம் அன்பு செலுத்தும் அடியார் பலதிறத்தவர். 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' எனத் திருக்கோயில்களுக்குச் சென்று வணங்குவார் சிலர். 'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' எனக்கோயில் கோபுரத்தைக் கண்டபோதே வணங்குவார் சிலர். கோயிலுக்குள் நுழைந்து இறைவன் சந்நிதியில் அஷ்டாங்க நமஸ்காரம், பஞ்சாங்க நமஸ்காரம் எனத் தம உடலுறுப்புக்கள் நிலத்தில தோய விழுந்து வணங்குவோர் சிலர். மனம் கலந்து பாடித் துதிப்பவர்கள் சிலர். தலைமேல் கைகளை உயர்த்திக் கூப்பியும், நெஞ்சில் கைசேர்த்தும் வணக்கம் செய்வார் சிலர். தெருவில் செல்லும் போது கோயிலைக் கண்டால் 'சல்யூட்' அடிப்பது போல் வணங்கி விட்டுத் தமது வேலையின நிமித்தம் நிற்காமல் போவார் சிலர். தம் வீட்டிலேயே கடவுள் படங்களையும் உருவங்களையும் வைத்து வணங்குவோர் பலர்.

இவர்கள அனைவரும் பக்தர்களே. ஆண்டவனின் அடியார்களே. தெய்வத்திருவருள் தமக்கு வாய்க்க வேண்டும் என்றே இவர்கள் அனைவரும் வணங்குகிறார்கள. இவர்களில் யாருக்கு இறையருள் எளிதில்கிடைக்கும்?

உடல் குழைய - எலும்புகளெல்லாம் உருக - ஊற்றெனக் கண்ணீர் பெருக - காந்தத்தைக் கண்டு நெருங்கும் ஊசியைப் போல இறைவனை அடையத் துடிக்கும தமது பக்தியை நினைத்து மனம் நடுங்க - பாட்டுப் பாடியும் ஆட்டம் ஆடியும்-குளிர்ச்சி பொருந்திய முகத்திலே ஒளிநிறைந்த புன்னகையோடு-இதழ் விரிக்கும் மலரைப் போலக் கைவிரித்துக் கூப்பி வணங்கி - 'அன்பு மேகமே! அம் மேகத்திலிருந்து பொழியும் கருணை மழையே!' என வாழ்த்தி வணங்கிக் கடல் வெள்ளம் பொங்கி எழுந்தது போனற அடியார்களின் பக்திக்கு எளியவன் இறைவன் என்று கூறுகிறார் தாயுமானவர். எனவே உள்ளம், உரை, செயல் என்னும் மூன்றும் ஒன்றுபட்டு உருகி வழிபடுபவர்களுக்கே இறைவன் எளிதில் அருள் புரிவான் என்பதை அவர்,

உடல்குழைய என்பெலாம் நெக்குருக
விழிநீர்கள் ஊற்றென வெதும்பியூற்ற
ஊசி காந்தத்தினைக் கண்டு
அணுகல் போலவே
ஓர் உறவும் உன்னி உன்னிப்
பட பட என நெஞ்சம் பதைத்து
உள் நடுக்குறப்
பாடி ஆடிக் குதித்துப்
பனிமதி முகத்திலே
நிலவனைய புன்னகை பரப்பி
ஆர்த்து ஆர்த்து எழுந்து
மடலவிழும் மலரனைய
கைவிரிதது கூப்பி
'வானே! அவ்வானில் இன்பமழையே'
மழைத்தாரை வெள்ளமே! வாழி!'
என வாழ்த்தி ஏத்தும்
கடல்மடை திறந்தனைய
அன்பர் அனபுக்கு எளியை

என்னும் அழகிய பாடலில் நமககுக் காட்டுகின்றார்.

பல்லவ மன்னர்கள் காலத்தில் காஞ்சிமாநகரில் திருமால் அடியவர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் கணிகண்ணன் என்பது. அவர் சிறந்த புலவராகவும் திகழ்ந்தார். அதனால் அவர் அந்நகரிலிருந்த பள்ளி கொண்ட பெருமாள கோவிலுக்குச் சென்று நாள்தோறும் புதிய பாடல்களை இயற்றிப் பாடி வணங்கி வந்தார். அதுகண்ட பல்லவ மன்னன் அப்புலவரை அழைத்துத் தன்னைப் புகழ்ந்து பாடுமாறு கட்டளையிட்டான். 'அரங்கனைப் பாடும் வாயால் மறுத்துவிட்டார். அதனால் அரசன் சினம் கொண்டு, தன் நாட்டைவிட்டு நீங்கும்படிகட்டளையிட்டான். புலவர் இறைவனைப் பிரிய மனமில்லாமல் அத்திருக்கோயிலை அடைந்து,

கணிகண்ணன் போகின்றான்
காமருபூங் கச்சி
மணிவண்ணா நீயிங்கு இராதே -
துணிவுடனே
செந்நாப் புலவன்யான் செல்கின்றேன்
நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்

என்னும் பாடலைப் பாடி 'நீயும் என்னோடு வந்துவிடு' என இறைவனை வேண்டினார். அவ்வளவுதான், திருமால் தன் பாம்புப் படுக்கையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு புலவரோடு புறப்பட்டு விட்டாராம். கோயில் வெறுமையாய்ப் போன செய்தி பல்லவ அரசனுக்கு எட்டியது. கணிகண்ணனைக் கண்டு தான் செய்த தவறுக்கு அரசன் மன்னிப்பு வேண்டினான். புலவரும் மனம் இரங்கி,

கணிகண்ணன் போக்கொழிந்தான்
காமருபூங் கச்சி
மணிவண்ணா நீயிங்கு எழாதே -
துணிவுடனே
செந்நாப் புலவன்யான்
சொல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாயவிரித்துக் கொள்

என்று பாடி அரங்கப்பெருமானை அக்கோயிலிலேயே மீண்டும் இருக்கச் செய்தார். மெய்யடியார்களின் பக்திக்கு மிகவும் எளியவன் ஆனதால் அல்லவா கணிகண்ணனது பேச்சுக்கு இறைவன் கட்டுப்பட்டிருக்கிறான்?

மெய்யடியார்களுக்குக் கைலாயம் கைக்கு எட்டிய தூரம்; வைகுந்தம் கூப்பிடுதூரம்.

**புலவர் திரு. பெ. கிருஷ்ண ராஜன், M.A., M.Ed.**
*சேலம்-6.*

தன். கைலாயத்தில் இருந்த சிவ பெருமானை அவன் எப்போதும் நினைத்து வணங்கிக் கொண்டிருந் தான். அவனது வாழ்நாள் முடிந்த போது எமனது பாசக கயிறு மார்க் கண்டேயனை வளைத்தது. மார்க்கண டேயன் தன் அருகிலிருந்த சிவலிங் கத்தைக் கட்டி அணைத்துக் கொண் டான்.சிவபெருமான்அங்கே தோன்றி எமனை ஒழித்து மார்க்கண்டேய னைக் காப்பாற்றினர். எனவே சிவ பெருமானது இருப்பிடம (கைலா யம்) மார்க்கண்டேயனுக்குக் கைக்கு எட்டிய தூரம் தானே!

கஜேந்திரன் என்னும் யானை நாள் தோறும் குளத்திற்குச் சென்று தாமரை மலா பறித்து வந்து திரு மாலை வணங்குவது வழககம். ஒரு நாள் குளத்திலிருந்த முதலையொன்று கஜேந்திரனின் காலைக் கவ்விப் பிடித் தது. உயிருக்கு ஆபத்தான நிலையில் கஜேந்திரன், 'ஆதிமூலமே!' என்று அழைத்தது. திருமால் அங்கே விரைந்துவந்து முதலையைக் கொன்று யானையைக் காப்பாற்றினர். அபயக் குரலைக் கேட்டு உடனே ஓடிவந்த தால் திருமாலின் இருப்பிடம் (வைகுந்தம்) கஜேந்திரனுக்குக் கூப் பிடு தூரம்தானே!

தாதவர்கள். தொண்டர் குலமே தொழுகுலம் என்னும் உயரிய நோக் கம உடையவர்கள்

அங்கமெலாம குறைநதழுகித
தொழுநோய ராகி
ஆவுரித்துத தினறுழலும்
புலைய ரேனும்
கங்கைவாா சடைக்கரந்தாாக்கு
அன்பராகில
அவாகண்டீா யாம்வணஙகும
கடவு ளாரே!

என நாவுக்கரசர் நற்றமிழில் பாடி ஞர். அவரைப்போலவே வைணவச் சான்ருேராகிய நம்மாழ்வாரும்,

பாதியாய் அழுகிய
கால்கைய ரேனும்
பழிதொழிலும் இழிகுணமும்
படைத்தா ரேனும்
ஆதியாய் அரவணையாய்
எனபா ராகில
அவர்கண்டீா யாம் வணங்கும்
அடிக ளாரே

எனத் திருவாக்குச செய்து சாதி வேற்றுமையைக் கடிந்தார். திருவரங் கத்தில் இருந்து வைணவம் வளர்த்த ஆசார்யன ஆளவநதார் என்பவர், பெரியநம்பி என்னும் அந்தணரையும் மாறனேர் நமபி என்னும் தாழ்த்தப் பட்டவரையும் தமககு இரு சீடர்

நடததியதும் சமயவாதிகளின் உயாநதஉள்ளத்தைக காட்டும்.

பாகவதம என்பது வைணவ நூல. பெரிய புராணம் என்பது சைவநூல். இவ்விரணடிலும் அனைத்துச் சாதிகளை யும் சேர்ந்த அடியார்களின வரலாறு வேறுபாடில்லாமல விளககப்படு கிறது.

சைவ அடியார்கள் ஆண்டவனிடம் தாசமார்க்கம், சத்புத்திர மார்ககம், சக மாாககம் என்னும் நிலைகளில் பக்தி செலுததிஞர்கள். 'என் கடன பணிசெய்து கிடப்பதே' எனக் கோவில்கள தோறும சென்று தொணடு செய்த திருநாவுக்கரசரின பக்தி தாச மார்க்கம் எனபபட்டது. உமாதேவியாரின் ஞானப் பாலுணடு வடமொழியும் தெனமொழியும கைவரப்பெறறுக் குழநதைப் பருவத திலேயே தெய்வப் பாடல்கள பாடி வணஙகிய திருஞானசமபநதரின் பகதி சத்புத்திர மார்க்கம எனப் பட்டது. சிவபெருமானல நண்ப ரென ஏறறுக்கொள்ளப்பட்டுத் 'தம பிரான் தோழர்' எனப் பாராடடப் பட்ட சுநதரரின் பக்தி சகமார்க்கம எனப்பட்டது. வைணவ ஆழ்வாா களில் சிலர் நாயகன்-நாயகி பாவத் தில் பல பாடலகளை இயற்றித் தம்

பக்தியை வெளிப்படுத்தியுள்ளார்கள்.

அடியாாகள் தாம மட்டுமே கோவில்களுக்குச் சென்று இறை வழிபாடு செய்ய வேண்டும் என்று நினைத்திலர். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று அவர்களின் உயர்ந்த உள்ளம் விரும்பியது. அதனால் கூட்டமாகச் சென்று வழிபடுவதையே அவர்கள் விரும்பினார்கள். தனி வழிபாட்டை வீட்டிலே கூடச் செய்யலாம். கூட்டுவழிபாட்டிற்காக அல்லவா கோவில்கள் எழுப்பப் பட்டன? கூட்டு வழிபாட்டினால் ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டுதல்-உதவி செய்து கொள்ளுதல் முதலிய உயர் பண்புகள் வளர்கின்றன. எனவேதான் குலசேகர ஆழ்வார் தாம் மிகச் சிறந்த வைணவ அடியாராக இருந்தும், தாம் மட்டுமே தனியாகச் சென்று வழிபடுவதை விரும்பாமல்,

அணியரங்கத்து அரவணையில்
பள்ளிகொள்ளும்
அம்மான்தன் அடியிணைக்கீழ்
அலர்களிட்டுஅங்கு
அடியவரோடு என்றுகொலோ
அணுகும் நாளே?'

என்று, கூட்டமாகச் சென்று வழிபடும் நாள் எந்நாளோ என ஏங்குகிறார்.

கசிந்துருகும் அன்பர்களுக்கு உதவுவதோடு, அவர்களுடைய உள்ளத்திலேயே குடியிருக்கிறான் இறைவன். 'முகமெலாம் கண்ணீர் மல்க முன் பணிந்து ஏத்தும் தொண்டர், அகமலால் கோயில் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே' என்பது இதனை வலியுறுத்தும் திருநின்றவூர்ப் பூசலார் நாயனார் நெடிதுநாள அன்பு செய்து அமைத்த மனக்கோயிலில் இறைவன் எழுந்தருளினான் என்பதை ஆன்மீக உலகம் நன்கறியும்.

ஒரு சமயம் தமிழ்ப்புலமை மிக்க ஔவை மூதாட்டியிடம் முருகக் கடவுள் 'பெரியது எது?' என்று கேட்ட போது ஔவையார் 'சராசரம் அனைத்தையும் கொண்ட பிரபஞ்சமே பெரிது. அந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தவன் பிரம்மன். ஆகவே பிரம்மன்தான் பெரியவன். பிரம்மனோ திருமாலின் உந்தியில் பிறந்தவன். எனவே திருமாலே பெரியவன். திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டவன். எனவே கடல்தான் பெரிது. கடலோ அகத்தியன் கையினுள் அடக்கம். எனவே அகத்தியன்தான் பெரியவன். அகத்தியனோ ஒரு குடத்துள் பிறந்தவன. எனவே குடம் தான் பெரியது. குடமோ இவ்வுலகில் சிறுமண். எனவே உலகம் தான் பெரியது. உலகமோ ஆதிசேடன் என்னும் பாம்பினால் சுமக்கப்படுவது. எனவே ஆதிசேடனே பெரியது. அந்தப் பாம்போ உமாதேவியின் சிறு விரலுக்கு மோதிரம். எனவே உமா தேவிதான் பெரியவள். உமா தேவியோ சிவபெருமானின் உடலிற் பாதி. எனவே சிவபெருமானே பெரியவர். சிவபெருமானோ அடியவர் உள்ளத்துள் அடக்கம். எனவே அடியவர்களே பெருமை மிக்கவர்கள் ஆவார்கள். அவர்களின் பெருமையை யாராலும் விளக்க முடியாது' என்று கூறினாராம். 'தொண்டர்தம் பெருமை சொல்லவும் படுமோ?' என்பது ஔவையின் அமுத மொழி.

அடியார் பெருமை அளவிடற்கரியது. அதனால்தான் 'ஒருமையுடன் நினது இரு திருமலரடி நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும்' என அடியார் உறவை வடலூர் இராமலிங்க அடிகள் வேண்டுகின்றார்.



## சந்தாதாரர்களுக்கு....

31-10-89—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

18 47 52 54 58 60 109 112 190 222 228 239 244 245 246 358 365 367 379 382 403 405 406 407 409 411 முதல் 416 421 428 541 548 556 563 564 569 570 576 583 584 646 669 709 712 773 785 789 790 792 793 794 795 798 800 803 804 807 811 812 814 815 818 823 முதல் 827 829 831 832 833 836 865 1526 2863 2904 3059 3080 3104 3157 3184 3206 3227 3279 3280 3289 3296 3308 3313 3324 3330 3335 3347 3355 3356 3358 3361 3366 3367 3373 3374 3379 3381 3391 3392 3402 3407 3409 3411 3422 3430 3431 3432 3435 3436 3437 3440 3445 3448 3453 3454 3455 3456 3457 3458 3460 3462 3463 3464 3466 3467 3472 3473 3474 3477 3479 3482 3483 3484 3486 3487 3488 3498 3499 3500 3501 3504 3506 3508 3510 3511 3513 3514 3515 3516 3521 3525 3526 3528 3529 3531 3534 3535 3548 3556 3558 3560 3561 3563 3565 3566 3567 3572 3573 3574 3579 4484 4485 4486 4487 4501 4503 4510 4512 4514 4518 4520 முதல் 4534 4536 முதல் 4546 4548 4549 4551 முதல் 4586 4588 4589 முதல் 4600 4602 முதல் 4607 4609 முதல் 4626 4627 4629 4631 முதல் 4682 4691 முதல் 4695 4697 முதல் 4702 4704 முதல் 4746 4748 முதல் 4774 4776 முதல் 4783 4798

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED

